# பாரதியும் பாட்டும்

செந்தமிழ்ச்செல்வர்

ம. ப. பெரியசாமித் தூரன்





# சிறப்புரை

## ஜஸ்டிஸ் உயர்திரு எஸ். மகராஜன்

'பாரதியும் பாட்டும்' என்ற இந்தத் தொகுப்பு நூல் நல்ல நேரத்தில் வெளிவருகிறது. தமிழ் மொழியோடு, சமஸ்க்கிருதம், தெலுங்கு, ஹிந்தி, ஆங்கிலம், ஃப்ரெஞ்சு முதலிய பல அரிய மொழிகளை ஆசையோடும் ஆர்வத்தோடும் கற்ற கவி சுப்பிரமணிய பாரதியார், மொழி வெறியின்றி எதையும் நடுவு நிலையில் இருந்து நிதானிக்கும் திறமையும் மாசறு காட்சியும் பெற்றவர் அவர். இப்பேர்ப்பட்ட மேதையின் இசை பற்றிய தீர்ப்புகளை இந்நூலில் திரட்டித் தந்த தொகுப்பாசிரியர் பெரியசாமித் தூரன் அவர்களுக்குத் தமிழுலகம் மிகவும் கடமைப்பட்டுள்ளது.

பாரதியார் தூரதிருஷ்டியோடு கண்ட காட்சிகள் நம்முடைய ஊனக் கண்களுக்கு இப்போதுதான் தெரிகின்றன.

> "தாயின் மணிக்கொடி
> பாரீர்."

என்று பாடினார். அவர் காட்சியில் தோன்றிய தாயின் மணிக்கொடியை அவர் மறைந்து கால் நூற்றாண்டு கழித்துத்தான் நம் ஸ்தூலக் கண்களால் பார்க்க முடிந்தது. அதைப் போலவே அரை நூற்றாண்டுக்கு முன்னால் அவர் சொன்ன ஜோஸ்யம் இப்போது பலித்து வருகிறது. என்ன சொன்னார்? "தமிழ்ச் சபையிலே எப்போதும் அர்த்தம் தெரியாத பிற பாஷைகளில் பழம் பாட்டுகளை மீட்டும் மீட்டும் சொல்லுதல் நியாயம் இல்லை. அதனால் நமது ஜாதி ஸங்கீத ஞானத்தை இழந்து போகும்படி நேரிடும்" என்று சொன்னார். நம் கண் முன்னால் நமது ஜாதி ஸங்கீத ஞானத்தை இப்போது இழந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். தமிழ் நாட்டிலுள்ள இளம் தலைமுறையினர் மெல்லிசை என்ற வல்லிசை வெள்ளத்தின் பயங்கரச் சுழிகளிலே அகப்பட்டு அமைதியைக் குலைக்கும் உணர்ச்சிச் சூறாவளியிலே சுழன்று, கர்நாடக சங்கீதம் என்ற

தமிழிசையின் ஞானத்தையும் அதனால் ஏற்படும் ஆன்ம அமைதியையும் இழந்து வருகின்றார்கள். நமது இசைவாணர் கள், தமிழர்களுக்குப் புரியாத மொழிகளிலே பாடிப் பாடி, மரபு வழி வந்த நமது இசையின் மீதே தமிழ்ச் சாதிக்கு வெறுப்பு ஊட்டிவிட்டார்கள். இன்று நடந்துகொண்டிருப் பதை ஞானதிருஷ்டியால் அன்றே கண்டு விட்டார் பாரதியார். தாம் கண்டதைப் பொருத்தில் அடித்த மாதிரி அல்லவா அவர் சொல்லிவிட்டார்:—"தமிழ்ச் சபைகளிலே எப்போதும் அர்த்தம் தெரியாத பிற பாஷைகளில் பழம் பாட்டுகளை மீட்டும் மீட்டும் சொல்லுதல், நியாயம் இல்லை, அதனால் நமது ஜாதி ஸங்கீத ஞானத்தை இழந்து போகும்படி நேரிடும்" என்று. நேரிடும் என்று சொன்னது இப்போது நேரிட்டுக் கொண்டிருக்கிறது. இசைக் கச்சேரிகளுக்குக் கூட்டம் வருவது இல்லை. ஆனால் மெல்லிசைக் கச்சேரிகளுக் கும், நாட்டியக் கச்சேரிகளுக்கும், நாடகங்களுக்குமே பெரும் கூட்டம் வருகிறது என்று சென்னையிலுள்ள சங்கீத சபா நிர்வாகிகள் பலரும் ஒருமனதாகச் சொல்லுகிறார்கள். அப்படியானால் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக வழிவழி யாகத் தமிழர்கள் அனுபவித்து வந்த இசையைத் தமிழர் களே இப்போது புறக்கணிக்கிறார்கள் என்று தானே பொருள்? புறக்கணிப்பதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். ஆனால் அவற்றிலெல்லாம் முக்கியமான காரணம் தமிழர்களுக்குப் புரியாத மொழியிலே உள்ள இசைப் பாடல்களைப் பாகவதர் மாறிமாறிப் பாடி அவர்களுக்குக் கசப்பு ஏற்றியிருப்பதுதான்.

இசை ஞானத்தை மாத்திரம் நாம் இழந்துகொண்டிருக்க வில்லை. இதயக் கல்லைப் பிசைந்து கனியாக்கி அருள் வெள்ளத் தில் அமிழ்த்தும் இசைப் பயனாகிய பக்தியையும் நாம் இழந்து வருகிறோம். இதையுணர்ந்த சில இசை மேதைகள். "சங்கீதத் துக்குப் பாஷை அவசியமில்லையே. அதற்குத் தனித்து இயங் கும் ஆற்றல் இருக்கிறதே" என்று சொல்லி, தந்திரமாக நம்மைத் திசை திருப்பப் பார்க்கிறார்கள். தந்திரிகளுக்கெல் லாம் மேலான தந்திரி ராஜாஜி; திசைதிருப்பிகளுடைய வாதத்துக்கு ராஜாஜி சொன்ன பதில் வருமாறு :—

*"தமிழ் இசை சம்பந்தமாக, சங்கீதத்துக்கு மொழி வேண்டுமா வேண்டாமா என்கிற வாதம் பிரமாதமாக இந்த இசை இயக்கத்தில் அடிபடுகிறது. மொழி பற்றி வித்தியாசம் ஏற்பட்டபடியால், மொழியே வேண்டாம் என்ற வாதம் போட்டால், நம் கட்சி பலமாகப் போய் விடுகிறது என்ற உத்தேசத்தின் மேல் சங்கீதத்துக்கு மொழியே வேண்டாம் என்று சிலர் சொல்கிறார்கள். இது எப்படி இருக்கிறது என்றால் தென்கலை வேண்டுமா, வடகலை வேண்டுமா என்று கேட்டால், இந்து மதமே வேண்டாம் என்பது போலவும், சிவன் கோயில் வேண்டுமா, விஷ்ணு கோயில் வேண்டுமா என்று கேட்டால், கோயிலே வேண்டாம் என்பது போலவும் இருக்கிறது. தியாகையர் தமிழில் பாடுவதற்குப் பதில், தமிழ்நாட்டில் இருந்துகொண்டு தெலுங்கில் பாடினார். அது ஒன்றே போதும் தமிழிசை இயக்கத்துக்கு ஆதரவு"

"அவர் தமிழ் நாட்டிலே வளர்ந்து தமிழ்த் தேசத்தில் புகழ் பெற்றவர். ஆயினும் அவர் ஏன் தெலுங்கில் பாடினார்? தெலுங்கு நல்லது என்று அதில் அவர் பாடவில்லை. தெலுங்கு அவருக்குத் தாய் பாஷை ஆகியதால் அவர் அதில் பாடினார். நாமும் தாய் பாஷையில் பாடினால்தான் நம் ஆத்மாவுக்குத் திருப்தி கிடைக்கும், கடவுளுக்கும் காது கேட்கும்."

ராஜாஜியின் இந்த வாசகத்தைப் படித்த சிலர், "இது என்ன, ராஜாஜி ஒரு கட்சிக்கு வக்காலத்து வாங்கிப் பேசுவது போல் இருக்கிறதே? தெலுங்கில் பாடினால் கடவுளுக்குக் காது கேட்காதா, தமிழில் பாடினால்தான் காது கேட்குமா?" என்று கேட்கலாம். இப்படிக் கேட்பவர்கள் ராஜாஜியைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. எஸ்கிமோ மொழியிலே பேசினாலும் ஸர்வஞ்ஞனான இறைவனுக்குக் காது கேட்கும். மொழிகளை யெல்லாம் படைத்த முழுமுதல் அல்லவா அந்த இறைவன்.

ஆனால், ஒன்றை மறந்துவிடக் கூடாது. எஸ்கிமோ பாஷை தெரியாத நாம் எஸ்கிமோ பாஷையில் எழுதிய சாகித்யத்தை எப்படி அழகாகப் பாடினாலும், நமக்கு உருக்கம் ஏற்

* நண்பர் சோமுவின் நாட்குறிப்பில் 21/5/43-ல் பதிவு செய்யப்பட்ட வாசகம் இது.

[illegible] தெரியாத தமிழ் மக்களும் உருக மாட்டார்கள். உருகினால் அல்லவா இறைவனோடு ஒட்டலாம், இரண்டும் ஒன்றுமாகக் கலக்கலாம். அப்படி ஒன்றி உறவாட நம்மால் முடியவில்லை யென்றால் நாம் பாடிய எஸ்கிமோ பாட்டு விருதா பாட்டுதானே, நம் விண்ணப்பத்தை இறைவன் ஏற்றுக்கொள்ளும் படியாக நாம் சொல்லவில்லை என்றுதானே பொருள்? அப்படியானால் இறைவனுக்குக் காது கேட்கும்படியாக நாம் பாடவில்லை. இதைத்தான் ராஜாஜி சொன்னார்கள்.

ஆகவே, பிற மொழிகளிலே பாடுவதால், பாரதியார் சொல்வது போல, நம்முடைய இசை ஞானம் மறைந்து போகும். அதன் விளைவாக ராஜாஜி சொல்வது போல, நமக்கே உரிய பக்தியும் மறைந்துபோகும். இதற்கெல்லாம் மேலாக பாகவதர்களுடைய பிழைப்பும் கெட்டுப் போகும். மெல்லிசையை வல்லிசை கபளீகரம் பண்ணிவிடும் என்பதைப் பாகவதர்கள் இப்போதாவது உணர்ந்தால், அவர்களுக்கும் நல்லது, நம்முடைய இசை ஞானத்துக்கும் நல்லது, நமது பக்திக்கும் நல்லது.

அதோடு சொற்களே இல்லாத சங்கீதத்தை மணிக்கணக்காகப் பாடுவது என்பதோ அனுபவிப்பது என்பதோ வெகு சிலருக்கே முடியும். ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் சொன்னது போல, கடலை மாவுக்கும் சர்க்கரைக்கும் நமக்கு வேற்றுமை தெரியத்தான் செய்யும், கடலைமாவையே தின்றுகொண்டு இருக்கவும் முடியாது, சர்க்கரையையே தின்று கொண்டு இருக்கவும் முடியாது; இரண்டையும் சேர்த்து லட்டு செய்துகொடுத்தால், நன்றாகவே சாப்பிடலாம்.

ஆகவே, தமிழிலுள்ள ஏராளமான, ஆனால் துருப்பிடித்துப்போன சாகித்யங்களை இசைவாணர்கள் துலக்கி, கச்சேரிகளில் பாடி, தமிழ் மக்களை மகிழ்விக்க வேண்டும். தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்யப்பிரபந்தம், ராம நாடகம், மாரி முத்தாப் பிள்ளை, முத்துத்தாண்டவர், கோபாலகிருஷ்ண பாரதி, திருகூடராஜப்ப கவிராயர் ஆகியோர் எழுதிய அற்புதமான இசைப் பாடல்கள் வேண்டுமட்டும் தமிழில்

இருக்கின்றன. பல சாகித்யங்கள் பாடுவார் அற்று மறைந்து போய்விட்டன. டாக்டர் சுவாமிநாத அய்யர் அவர்கள் தம்முடைய வாழ்விலேயே இளமைப் பருவத்தில் கேட்ட அற்புதமான தமிழ்ச் சாகித்யங்களை முதுமைப் பருவத்தில் கேட்க முடியாமற்போய்விட்டது என்றும், அதற்குக் காரணம் தமிழ்நாட்டுப் பாகவதர்கள் தமிழிசைப் பாடல்களைப் புறக் கணித்துவிட்டு, வேற்று மொழிப் பாடல்களைப் பாடினதுதான் என்றும் சொல்லியிருக்கிறார்கள்.

தமிழ்நாட்டில் இப்போதுள்ள நிலை இங்லாண்டிலும் பத்தொன்பதாவது நூற்றாண்டில் ஏற்பட்டது. ஐரோப்பிய சாகித்யத்தில் மகாமேதைகளான பீத்தோவன் (Beethoven), வாக்னர் (Wagner) முதலியோர் உயர்ந்த சாகித்யங்களை ஜெர்மன் மொழியிலேயே இயற்றிவிட்டார்கள். இந்த ஜெர்மன் சாகித்யங்களை இங்கிலீஷ்காரர்கள் இங்லாண்டிலே இறக்குமதி செய்து கச்சேரிகளில் பாடத் தொடங்கினார்கள். ஜெர்மன் தெரியாத இங்கிலீஷ் பாகவதர்கள் இந்த ஜெர்மன் சாகித்யங்களைப் பாடினார்கள். கேட்க வந்த இங்கிலீஷ் அசடுகள், ஜெர்மன் மொழி தெரியாவிட்டாலும், நமக்குச் சங்கீதம் தெரியாது என்று யாரேனும் சொல்லிவிடுவார்களோ என்று பயந்து ஜெர்மன் சாகித்யங்களுக்குப் பொருள் தெரிந்தது போல் தலையாட்டினார்கள், 'பலே', 'பேஷ்' என்று பாராட்டினார்கள். கார்லைல் (Carlyle) என்ற ஆங்கிலப் பேரறிஞர் இந்தக் கன்ராவியையெல்லாம் தாங்க முடியாமல் சீற்றம் கொண்டு ஜெர்மன் சாகித்யத்தை எதிர்த்தார். சங்கீதத்துக்கும் உணர்ச்சிக்கும் இடையிலே இருக்கும் உறவு, மனைவிக்கும் கணவனுக்கும் இடையே இருக்கும் உறவைப் போன்றது என்றும், ஜெர்மன் சாகித்யங்களை அர்த்தம் தெரியாமல் பாடுவதாலும் கேட்பதாலும் சங்கீதத்துக்கும் உணர்ச்சிக்கும் இடையிலே இருந்த விவாக உறவு ரத்தாகிவிடும் என்றும் அவர் சொன்னார்.

அதோடு, "Music has become mad, divorced from sense and the reality of things" (சங்கீதத் தேவதைக்குப் பித்து பிடித்துவிட்டது, பொருள், உண்மை ஆகியவற்றுக்கும்

சங்கீதத்துக்கும் இருந்த உறவு அறுந்து போய்விட்டது) என்று கதறினார். மேலும் சொன்னார்:—''சங்கீதத் தேவதை அங்கு மிங்குமாகக் காட்டுத்தனமாக வெறி பிடித்து ஓடிக்கொண் டிருக்கிறாள். 'எனக்கும் அறிவுக்கும் சம்பந்தம் இல்லை, எனக் கும் உண்மைக்கும் சம்பந்தம் இல்லை, என்று பீற்றிக்கொண்டு ஓடுகிறாள், கற்பனையும் ஜன்னிக் கோளாறுமே எனக்கு உரியவை' என்று புலம்பிக்கொண்டு இருக்கிறாள். நான் இது தவறு என்று சொன்னால், அவள் என்னை நோக்கிப் பைத்தியச் சிரிப்புச் சிரிக்கிறாள்'' என்று சொன்னார். அதே நிலைமையைத்தான் தமிழ்நாட்டிலும் நாம் கண்டு கொண்டு இருக்கிறோம்.

ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்களும், ரசிகமணி டி.கே.சி.யும், ராஜாஜியும், கல்கியும் தொடங்கிவைத்த தமிழிசை இயக்கம் ஓரளவு பைத்தியத்திலிருந்து நம்மைத் தெளிய வைத்திருக்கிறது. பாபநாசம் சிவன், கவியோகி சுத்தானந்த பாரதியார், தண்டபாணி தேசிகர், கீழ்வேளூர் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை, இந்த நூலைத் தொகுத்த பெரிய சாமித்தூரன் முதலியோர் புதிய சாகித்யங்களைத் தமிழில் உண்டுபண்ணி நல்ல சேவை செய்து வருகிறார்கள்.

''பாட்டும் செய்யுளும் கோத்திடுவீரே
பரத நாட்டியக் கூத்திடுவீரே''

என்று பாரதியார் சொன்னபடி, புதிய புதிய சாகித்ய கர்த் தாக்கள் புதிய புதிய தமிழ் இசைப் பாடல்களை இயற்றி, காலத்தின் கோலத்துக்குத் தக்கவாறு நல்குவார்களேயானால், பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தொடர்ந்து தமிழர்களை மகிழ்வித்து வந்த தமிழிசைக்குப் புத்தூட்டமும் புத்துயிரும் பேராதரவும் கிட்டும். இந்தப் புதிய முயற்சிக்குப் 'பாரதியும் பாட்டும்' என்ற அரிய நூல் ஒரு கைகாட்டியாக அமையும். இந்த நூலைப் படித்து, தமிழ் மக்களும் இசைவாணர்களும் பயனடையவார்களாக.

எஸ். மகராஜன்

# முன்னுரை

"பாரத தேசத்து ஸங்கீதம் பூமியிலுள்ள எல்லா தேசத்து ஸங்கீதத்தைக் காட்டிலும் மேலானது". இது பாரதியார் வாக்கு. மற்றோரிடத்திலே அவரே சொல்லு கிறார்.

பலதேசத்து ஸங்கீதங்களையும் நான் ஒருவாறு ஒப்பிட்டுப் பார்த்திருக்கிறேன். நமது புராதன ஸங்கிதத்திற்கு நிகரானது இவ்வுலகத்தில் வேறெங்குமில்லை என்பது என்னுடைய முடிவு:—தராசு.

ஏதோ, 'நம்முடையது' என்பதற்காக பாரதியார் இவ்வாறு புகழ்ந்து பேசவில்லை. உண்மை இதுவேயாகும். இதை உலகத்திலுள்ள பெரிய நாடுகள் பலவும் இன்று உணர்ந்து கொண்டிருக்கின்றன.

காலை எழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு-என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா

இவ்வாறு பாப்பாவுக்கு அன்போடு கூறுகின்றார் பாரதியார். பாடல்களிலே ஒரு வைரமணி போன்ற அழகு வாய்ந்தது பாப்பாப் பாட்டு. குழந்தைக்கு வேண்டிய அத்தனை அறிவுரைகளையும் அதிலே தீட்டியிருக்கிறார்.

ஓடி விளையாடு பாப்பா என்று தொடங்கியவர் எல்லா உயிர்களிடத்திலும் அன்பு கொள்ள வேண்டும் என்ற உயரிய எண்ணத்தை கூறிவிட்டு அடுத்தபடியாகக் காலை எழுந்தவுடன் படிப்பு என்று தொடங்கிப் பின்பு கனிவு கொடுக்கும் நல்ல பாட்டைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று பாட்டுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார் பாரதியார்.

இப்படிப் பாடுகின்றவர் பாட்டின் பெருமையை நன்கு உணர்ந்ததோடு இசைக் கலையிலே சிறந்த ஞானம் உடையவர் என்பதும் அவர் பாடியுள்ள பாடல்களிலிருந்தும், எழுதியுள்ள கட்டுரைகளிலிருந்தும் நன்கு வெளிப்படுகின்றது.

"கானத்திலே அமுதாக நிறைந்த-கவிதையிலே உயர் நாடு" என்று பாரத நாட்டைப் புகழ்ந்து பேசுகின்ற பாரதியார் தமது இஷ்ட தெய்வமான பராசக்தியை "பாட்டில் வந்த களியே சக்தி" என்று போற்றுகிறார். அந்த சக்தித் தாயை நினைந்து "எந்த நாளும் தாயே-நின் மீதிசைகள் பாடி வாழ்வேன்" என்கிறார்.

இசைவாணர்களிடத்திலே பாரதியாருக்கு அளவற்ற மதிப்பு உண்டு. எட்டயபுரம் சமஸ்தானத்தில் விளங்கிய சுப்பராம தீட்சிதர் காலஞ்சென்றபோது பாரதியார் பாடிய இரங்கற் பாக்களிலிருந்து இது நன்கு வெளியாகின்றது. மன்னர்களையும் பொய்ஞ்ஞான மதக் குரவர்களையும் பாரதியார் வணங்குவதில்லையாம். ஆனால் சுப்பராம தீட்சிதருடைய இசைக் கலையின் அருமை தெரிந்து அவரிடம் தலை தாழ்த்தி வந்தாராம்.

'மன்னரையும் பொய்ஞ்ஞான மதக்குரவர்
தங்களையும் வணங்கலாதேன்

தன்னனையே புகழுடையாய்: நினைக்கண்ட
பொழுதுதலை தாழ்ந்து வந்தேன்
உன்னருமைச் சொற்களையே தெய்விகமாம்
எனக் கருதி வந்தேன்"

இவ்வாறு பாரதியார் உள்ளம் உருகிப் பாடுகின்றார். "அந்தோ! நீ அகன்ற துயர் உரைக்கற் பாற்றே" என்று குமுறுகிறார். "அந்தோ! மறலி நம் அமுதினைக் கவர்ந்தான்" என்று புலம்புகிறார். நீயில்லாத எட்டயபுரத்திற்கு மீண்டும் வந்தால் எளியேனுடைய மனம் எப்படித் தவிக்குமோ என்றும் அந்த இரங்கற் பாடலிலே கதறுகின்றார்.

பாரதியார் காளிதேவியிடம் வரங் கேட்கிறார் யோக சக்தி என்ற தலைப்புள்ள அந்தப் பாடல் எல்லாராலும் எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய அவ்வளவு சிறப்பு வாய்ந்தது.

காளீ வலிய சா முண்டி-ஓங்
காரத் தலைவியென் னிராணி-பல
நாளிங் கெனைய லைக்க லாமோ—உள்ளம்
நாடும் பொருளடைநற் கன்றோ-மலர்த்
தாளில் விழுந் தபயங் கேட்டேன்-அது
தாயாயெனில் உயிரைத் தீராய்

என்று பாடலிலே உணர்ச்சி பொங்கி வழிகின்றது.

அப்பாடலில்தான்

தோளை வலியுடையதாக்கி-உடற்
சோர்வும் பிணி பலவும் போக்கி-அரி
வாளைக் கொண்டு பிளந்தாலும்-கட்டு
மாறு உடல் உறுதி தந்து

என்று தம் உள்ளத்தின் ஆசைகளையெல்லாம் கொட்டி வரங் கேட்கிறார்.

பாட்டிலே உள்ளத்தைப் பறி கொடுத்த பாரதியார் பாட்டைப் பற்றிக் கேட்காமல் விடுவாரா?

அவர் மேலும் கேட்கிறார் :

—சுவை

நண்ணும் பாட்டினொடு தாளம்-மிக
நன்று வுளத் தழுந்தல் வேண்டும்-பல
பண்ணிற் கோடிவகை இன்பம்-நான்
பாடத் திறனடைதல் வேண்டும்

இவ்வாறு வரங்கேட்ட பாரதியார் பாட்டின் சிறப்பையும் இசையின் சிறப்பையும் தமது கவிதைகளிலே பல இடங்களிலே எடுத்துக் காட்டியுள்ளார். கடல் ஒலியோடு தமிழ்ச் சொல் இசையையும் சேர்க்க வேண்டும் என்ற தமது விருப்பத்தையும் வெளிப்படுத்துகின்றார். சூரிய தரிசனம் என்ற பாடலில்,

"வேதம் பாடிய சோதியைக் கண்டு
வேள்விப் பாடல்கள் பாடுதற்குற்றேன்
நாத வார்கட லின்னொலி யோடு
நற்றமிழ்ச் சொல் இசையையும் சேர்ப்பேன்"

என்று ஆதவனைப் போற்றுகிறார்.

பாரதியாருடைய படைப்பிலக்கிய ஆண்டுகளில் 1912ஆம் ஆண்டு ஒரு மணிமுடியாகத் திகழ்கின்றது. புதுச்சேரியிலே அடைக்கலம் புகுந்து பல இன்னல்களுக்கு ஆளாகி இருந்தாலும் வறுமை வெந்தழலிலே உழன்ற பாரதியாருடைய உள்ளம் புடமிட்ட பொன் போல உயர்ந்த இலக்கியங்களைப் படைத்து அவருக்கு அழியாப் புகழ் தந்தது. அந்த ஆண்டில்தான் பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு, குயில் பாட்டு என்ற இணையற்ற இலக்கியங்கள் உருப்பெற்றன; பகவத் கீதையின் தமிழ்மொழி பெயர்ப்பும், ஆறில் ஒரு பங்கு என்ற அற்புதமான

களையும் தோன்றின. இவையெல்லாம் பாரதியாருக்கு அமரத்வம் தருகின்றன என்று எல்லாரும் ஒப்ப முடிந்த கருத்தாகும். பாரதியாரின் மற்ற படைப்புகளும் அழிவற்றவை. கடல் போன்ற பாரதியார் இதயப்பரப்பிலே ஒவ்வொரு சிறு பகுதியையாவது காட்டக் கூடியவை என்பது என்னுடைய திடமான எண்ணம். இதிலே கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். அதைப் பற்றி விவாதிக்க இங்கு நான் முன்வரவில்லை. இது இடமும் அல்ல.

பாரதியார் குயில் பாட்டு எழுதியபோது அவருக்கு ஏறக்குறைய முப்பது வயது இருக்கும். ஆற்றல், அறிவு, எழுத்து வன்மை எல்லாம் முதிர்ச்சி பெற்ற நிலையில் அவர் அதைப் படைத்திருக்கிறார்.

அதிலே பாட்டைப் பற்றிப் பாரதியார் கூறியுள்ள பகுதிகள் பெரிதும் கவனத்திற்குரியவை:

கானப் பறவை கலகலெனும் ஓசையிலும்
காற்று மரங்களிடைக் காட்டும் இசைகளிலும்
ஆற்றுநீ ரோசை அருவி ஒலியினிலும்
மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரியிலும்
ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும், நெல்லிடிக்கும்
கோற் றொடியார் குக்குவெனக் கொஞ்சும் ஒலியினிலும்
சுண்ணமிடிப்பார்தம் சுவைமிகுந்த பண்களிலும்
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி இசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்
வேயின் குழலோடு வீணைமுதலா மனிதர்
வாயினிலும் கையினிலும் வாசிக்கும் பல்கருவி
நாட்டினிலும் காட்டினிலும் நாளெல்லாம் நன்றொலிக்கும்
பாட்டினிலும் நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன்

குயில் கூறுவதாக இவ்வரிகள் வந்திருந்தாலும் பாரதியார் இந்த இசைகளில் நெஞ்சைப் பறிகொடுத்த உண்மையையே வெளியிடுகின்றன.

இவ்வரிகளைவிடப் பன்மடங்கு தெளிவாக மேலும் சில வரிகள் வருகின்றன.

குயில் குரங்கோடு காதல் செய்கின்றது இரண்டாம் நாளில். மூன்றும் நாளில் குரங்கை மறந்து குயில் ஒரு காளை மாட்டுடன் காதல் பேசுகின்றது. இவற்றைக் கண்ட கவிஞனுக்குக் குயிலின் மேல் சீற்றம் பொங்கி எழு கின்றது. அந்த நிலையினிலும் குயிலின் பாட்டில் அவன் மெய்மறந்து நிற்கின்றான்.

பிரம்மாவின் படைப்புத் திறனை மெச்சிப் பேசு கின்றான், "நான்முகனே, நீ நீரைப் படைத்தாய்; நிலத் தைப் படைத்தாய்; காற்றை முன்னே ஊதினாய்; காணரிய வானவெளி தோற்றுவித்தாய்; வானத்தில் அண்டங்களை நிரப்பி, அவற்றைச் சுழன்றோடும்படி செய்தாய்; காலம் படைத்தாய்; நாள்தோறும் தோன்றி மறையும் உயிரினங் களை உண்டாக்கினாய். இவை பெரிய சாதனைகள்தான் என்றாலும் இவற்றைவிட அதிசயமான ஓர் ஒப்பற்ற சாதனை செய்திருக்கின்றாயே அந்தத் திறமையை யாரால் போற்ற முடியும்? அதிசயம் அதிசயம்" என்று சால நன்கு பாராட்டிவிட்டுப் பாட்டின் பெருமையைப் பேசத் தொடங்குகிறார்:

**ஆனாலும் நின்றன் அதிசயங்கள் யாவினுமே**
**கானமுதம் படைத்த காட்சிமிக விந்தையடா!**
**காட்டு நெடுவானம், கடலெல்லாம் விந்தையெனில்**
**பாட்டினைப்போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா!**
**பூதங்கள் ஒத்துப் புதுமைதரல் விந்தையெனில்**
**நாதங்கள் சேரும் நயத்தினுக்கு நேராமோ?**

ஆசைதருங் கோடி அதிசயங்கள் கண்டதிலே
ஓசைதரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ?

இவ்வாறு வியந்து போற்றும் பாரதியார் பாட்டிலும் இசையிலும் எவ்வளவு ஊறித் திளைத்திருக்கின்றார் என்பது சொல்லாமலே விளங்கும். ஆகவே அவர் பாட்டைப் பற்றித் தமது எண்ணத்தை உரைநடைப் பகுதியிலே விரிவாகக் கூறும்போது அதை எல்லாரும் ஊன்றிக் கவனத்தில் கொள்வது நல்லது.

இதைத் தெளிவுபடுத்தவே இதுவரை அவருடைய கவிதைகளிலிருந்து சில பகுதிகளை எடுத்துக் காட்டினேன். மேலும் பல பகுதிகளைப் பிற்சேர்க்கையாகக் கொடுத்துள்ளேன்.

பாட்டு என்ற தலைப்புக் கொடுத்து பாரதியார் விரிவான கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். இது ஆறு பகுதிகளாக சுதேசமித்திரனில் கீழ்க்கண்ட தேதிகளில் வெளியாகி இருக்கின்றன.

1. 3, மே 1917
2. 4, மே 1916
3. 11, மே 1916
4. 27, மே 1916
5. 10, ஜூன் 1916
*6. 19, ஜூலை 1916

இன்று சென்னை மாநகரிலும், வேறு சில முக்கியமான பட்டணங்களிலும் சங்கீத சபைகள் புதிது புதிதாகத்

---

*இந்த ஆறு கட்டுரைகளையும் தொகுத்து சங்கீத விஷயம் என்ற ஒரே தலைப்பில் நீண்ட கட்டுரையாக முன்பு பாரதி வசனத் தொகுப்பில் வெளியிட்டுள்ளார்கள். அது பாரதி பிரசுராலயத்திலிருந்து வெளி வந்ததாகும்.

தோன்றியுள்ளன; இன்னும் தோன்றிக் கொண்டிருக்கின்றன. சபைகளின் எண்ணிக்கையைக் கொண்டு பார்த்தால் நமது ஒப்பற்ற இசைச்செல்வம் வளர்ந்தோங்கி வருகின்றது என்றுதான் தோன்றும்.

ஆனால் அங்கெல்லாம் இசை அரங்குகள் எத்தனை நடைபெறுகின்றன என்று கணக்கிட்டதுண்டா? ஒரு மாதத்தில் நடைபெறும் களியாட்டங்களில் எத்தனை சதவீதம் இசைக்கு ஒதுக்கப்படுகின்றது? பரம்பரையாக வந்த இசையை விடப் புதிதாக முளைத்த மெல்லிசைக்கு அதிகமான ஆதரவு இருப்பதையும், அதிகமாகக் கூட்டம் கூடுவதையும் கவனித்ததுண்டா? நமது இளைஞர்களைக் கவர்வது மெல்லிசையே அல்லவா? சிந்தித்துப் பாருங்கள் நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்?

அடுத்த தலைமுறையினர் பூர்விகமான நமது இசையில் பற்றுதல் கொள்ளும்படி செய்யாவிட்டால் நமது சிறந்த கலையை இழந்துவிடுவோம். நாம் போற்றலாம். ஆனால் அதே போல இளந் தலைமுறையினரையும் இதன் பெருமையை உணர்ந்து போற்றும்படி செய்யாவிட்டால் நாம் நமது கடமையைச் செய்தவர்களாக மாட்டோம். மாட்டோம், மாட்டோம், மாட்டோம் என்று மும்முறையும் சொல்கிறேன்.

இன்று சங்கீத வித்வத் சபையும் (Music Academy) தமிழ் இசைச் சங்கமும் சேர்ந்து நமது இசையைக் காக்க வேண்டிய நிலைமை வந்துவிட்டது. சண்டையிடும் காலம் மாறிவிட்டது. அடிப்படைக்கே ஆபத்து என்றால் அதை உணர்ந்து முயற்சிகள் செய்ய வேண்டுவதில்லையா?

உலக நாடுகள் எல்லாம் நமது இசையைப் போற்றுகின்றன. மெய்தான். அந் நாடுகளிலுள்ள பலர் இதை

ஆர்வத்தோடு கற்றுக்கொள்ளவும் செய்கிறார்கள். மெய் தான்.

ஆனால் இந்த சங்கீதத்தின் பிறப்பிடத்திலேயே போற்றுவார் இல்லாவிட்டால், அந்த ஊற்று வற்றிவிட்டால் யார் இதன் பெருமையை உலகுக்குத் தொடர்ந்து அறிவிப்பது?

ஒரு பெரிய சங்கீத வித்வானிடம் விசாரித்தேன். அவருடைய குழந்தைகளில் யாரும் இசையைக் கற்றுக் கொள்ளவில்லையாம். அந்த வித்வான் விதிவிலக்கன்று. இதே கதிதான் பலருடைய வீட்டிலும்,

நமது சங்கீதம் இனி சோறு போடாது என்று பலரும் நினைக்கிறார்கள். சோறு கிடைப்பது கலையின் வளர்ச் சிக்கு முதல் அடிப்படை.

ஆயிரக்கணக்கான ஸ்தபதிகள், சிற்பிகள் பெருகி யிருந்த இந் நாட்டில் அவர்கள் சுருகிப் போய் விட்டார்கள் என்று நாம் அறிவோம். ஏன்? ஆதரிப்பார் இல்லாமை யால். ஆதரிப்பார் இருந்தால் அல்லவோ எந்தக் கலையும் வளரும்?

பாரதியார் பூர்விக மஹான்களின் பாடல்களை வெறுப் பவர் அல்ல என்பது அவருடைய கட்டுரைகளை நிதான மாகப் படித்துப் பார்த்தால் தெளிவாக விளங்கும். ஆனால் புதிய பாடல்கள் வேண்டும் என்கிறார். சங்கீதத்தை அதன் அடிப்படைத் தன்மை மாறாது பெருகியோடும் ஒரு ஜீவ நதியாக மாற்ற வேண்டும் என்று அவர் ஆசைப்படு கிறார். இல்லாவிட்டால் நமது சங்கீதம் ஒளியிழந்து விடும் என்கிறார்.

புதிய பாடல்களைக் கையாள்வதற்குப் பல விக்கினங் களைக் கற்பனை செய்து கொண்டிருக்கிறோம். அப்பாடல்கள் பழையதாக வேண்டும். காலம் கடந்து 50 ஆண்டு

களாவது அவை ஜீவித்திருக்க வேண்டும் என்கிறோம். கையாளாவிட்டால் ஜீவித்திருக்க முடியுமா?

பேராசிரியர் கல்கி அவர்கள் இந்தக் கருத்தைப் பற்றி அழகாகக் கூறியுள்ளார். அவர் கூறுகிறார்:

"எந்த நாவிலும் சாஹித்யம் தோன்றும்போது அது புதிய சாஹித்யமாகவே இருக்கும். தியாகராஜ கீர்த்தனங்களும், தீக்ஷிதர் கிருதிகளும் அவரவர்களுடைய காலத்தில் புதிய சாஹித்யங்கள்தான். அவற்றை வித்வான்கள் பாட மறுத்திருந்தால் சங்கீதக் கலை எவ்வளவு மகத்தான நஷ்டத்தை அடைந்திருக்கும்?

"பழமையைத்தான் கையாளுவோம், புதியதைத் தொடவே மாட்டோம்" என்றால், கலைகள் காலத்துக்கேற்ப வளர்ச்சி அடைவதுதான் எப்படி? அவ்வப்போது புதிய தண்ணீர் பாயாத குளத்தைப் போலக் கலையும் தேக்கமடைந்து வற்றிப் போய் விடக்கூடும் அல்லவா?

ஆகையால் கலை உலகில் புதுமைக்கும் இடம் இருக்க வேண்டும்."

இந்தக் கருத்து ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது.

பேராசிரியர் மேலும் கூறுவது போல, புதியனவற்றில் இன்றியமையாத பண்புகள் பொருந்தி இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும். தொடவே மாட்டேன் என்று கண்களை மூடிக் கொண்டால் பண்புகள் உள்ளதைத் தெரிந்து கொள்வதுதான் எப்படி?

வற்புறுத்தலுக்காகவோ, தாட்சண்யத்திற்காகவோ ஒரு பாடலை வித்வான் பாட வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். வித்வானுக்கு ஓர் உருப்படியின் சிறப்பு ஒரு சில தடவை தனியாகப் பாடிப் பார்க்கும்போதே தெரிந்துவிடும். அப்படி நல்ல பாடல்களைப் பொறுக்கி இசை அரங்குகளில் பாடினால், பிறகு

அவை மெருகு ஏறிப் பிரகாசிக்கும். பாடப் பாடத்தான் மெருகு ஏறும். புதிய கற்பனைகள், நளினங்கள், குழைவுகள் எல்லாம் தோன்றும்.

நவரசங்களில் இது போன்ற புதிய பாடல்கள் தோன்றிக் கங்கையும் காவிரியும் போல வற்றாது பெருக்கெடுத்து நமது சங்கீதம் ஓங்கி வளர வேண்டும் என்பதே பாரதியாரின் நோக்கமாகும்.

மேல் நாடுகளிலே பேத்தோவன் போன்ற பெரிய மஹான்கள் அந்த நாட்டு இசைக்கலையை வளர்த்திருக்கிறார்கள். அவர்களுடைய உருப்படிகள் ஒப்பற்றவை, அமரத்துவம் வாய்ந்தவை என்பதை யாரும் மறுக்க முடியாது.

ஆனால் அவர்களுடன் மேல்நாட்டு இசைக்கலை நின்றுவிட்டதா? இன்றும் புதிய மேதைகள் அங்கு பழைய மரபை ஒட்டித் தோன்றுகிறார்கள். அவர்களை மக்கள் போற்றுகிறார்கள். நான் இங்கு உயர் தனிச் செம்மை வாய்ந்த இசையையே (Clasical Music) குறிப்பிடுகிறேன். பிறவற்றை அல்ல.

இனி பாரதியாரின் எண்ணங்களைப் படியுங்கள். பாட்டு என்ற தலைப்பிலேயே அவற்றைத் தருகின்றேன். எந்த வகையிலாவது நமது இசைச் செல்வம் ஓங்கி வளர வேண்டும் என்ற ஆசையிலேயே இவ்வளவு நீண்ட முன்னுரையை எழுதினேன். வணக்கம்.

பெ. தூரன்

---

குறிப்பு : பாரதியார் பாட்டைப் பற்றியும் இசையைப் பற்றியும் கூறியுள்ளவற்றில் பலவற்றை இம்முன்னுரையில் சேர்த்துள்ளேன். இதில் சேர்க்கப்பெறாத வேறு பல பகுதிகளைப் பிற்சேர்க்கையாகக் கொடுத்திருக்கிறேன். மேற்கொண்டு ஆராய்ச்சி செய்பவர்களுக்கு இவை பயன்படும் என்று நம்புகிறேன்.

# 1

## பாட்டு

இங்குள்ள ஜந்துக்களிலே மனிதருக்கும் பறவைகளுக்குந்தான் பாடத் தெரியும். மற்ற மிருகங்களுக்குப் பாட்டு வராது. பறவைகள் வானத்திலே பறக்கும் வழக்கமிருப்பதால், அவற்றின் மன நிலை ஸங்கீதத்திற்கு இசைகின்றது போலும்! மனிதன் உடம்பினாலே பறக்காவிட்டாலும், உள்ளத்தைத் திசை வெளியிலே பறக்கும்படி செய்கிறான். அப்போது, இயற்கையிலேயே பாட்டுத் தோன்றுகிறது. ரஸங்கள் ஒன்பது:—

(1) வீரம்,

(2) ரௌத்திரம் (கோபம்),

(3) அத்புதம் (வியப்பு),

(4) சாந்தம் (நடுவுநிலை),

(5) பயாநகம் (அச்சம்),

(6) பீபத்ஸம் (வெறுப்பு),

(7) ஹாஸ்யம் (நகை),

(8) கருணை, சோகம் (துயரம்): இதை 'அவலம்' என்பது பழைய தமிழ் வழக்கு.

(9) சிருங்காரம் (காமம்).

வெளிப்பொருள்களைக் காணும்போது அல்லது நினைக்கும்போது மனிதனுடைய உள்ளத்திலே இந்த ஒன்பது சுவைகளில் ஏதேனும் ஒன்று தோன்றும். இரண்டு மூன்று

கலைந்தும் தோன்றக் கூடும். ரஸ உணர்ச்சியிலே உள்ளத்தை முழுதும் ஈடுபடுத்தக்கூடிய சிலர் கவிதை, பாட்டு, சித்திரம் முதலிய தெய்வக் கலைகளிலே சிறப்படைகிறார்கள். ரஸ உணர்ச்சி இல்லாவிடின், இக் கலைகள் நசித்துப் போகும்.

பிறர் துன்பத்தைக் காணும்போது தனது துன்பம் போல் எண்ணி வருந்தும் இயல்புடைய ஒருவனும் பிறர் துன்பத்தைக் கருதாத ஒருவனும் யாப்பிலக்கணம் படித்துக் கவிதை செய்யப் பழகுவாராயின், முந்தியவன் உண்மையான கவிதை எழுதுவான்; பிந்தியவன் பதங்களைப் பின்னுவான்; இவனுடைய தொழிலிலே கவிதை இராது. இப்படியேதான் ஒவ்வொன்றிலும்.

ரஸ ஞான மில்லாதபடி பல்லவிகளும் கீர்த்தனங்களும் பாடுவோர் ஸங்கீதத்தின் உயிரை நீக்கிவிட்டு வெற்றுடலை அதாவது பிணத்தைக் காட்டுகிறார்கள். இக் காலத்து ஸங்கித வித்வான்களிலே பலர் 'ஸங்கீதத்திற்கு நவரசங்களே உயிர்' என்பதை அறியாதவர்.

முத்துசாமி தீக்ஷிதர், தியாகையர், பட்டணம் சுப்பிரமணிய அய்யர் முதலியவர்களின் கிர்த்தனங்களிலே சிலவற்றை அதிக ஸங்கதிகளுடன் பாடுவோரே 'முதல்தர வித்துவான்'. இந்தக் கிர்த்தனங்களெல்லாம் ஸம்ஸ்கிருதம் அல்லது தெலுங்கு பாஷையில் இருக்கின்றன. ஆகவே, முக்காலே மும்மாகாணி 'வித்வான்' களுக்கு இந்தக் கிர்த்தனங்களின் அர்த்தம் தெரியாது. எழுத்துக்களையும் பதங்களையும் கொலை செய்தும், விழுங்கியும் பாடுகிறார்கள். அர்த்தமே தெரியாதவனுக்கு 'ரஸம்' தெரிய நியாயம் இல்லை.

நானும் பிறந்தது முதல் இன்றுவரை பார்த்துக் கொண்டே வருகிறேன். பாட்டுக் கச்சேரி தொடங்கு

கிறது. வித்வான் 'வாதாபி கணபதிம்' என்று ஆரம்பஞ் செய்கிறார். 'ராமநீ ஸமான மெவரு' 'மரியாத காதுரா' 'வரமு லொஸகி'......ஐயையோ, ஐயையோ, ஒரே கதை.

எந்த ஜில்லாவுக்குப் போ, எந்த கிராமத்திற்குப் போ, எந்த 'வித்வான்' வந்தாலும், இதே கதைதான். தமிழ் நாட்டு ஜனங்களுக்கு இரும்புக் காதாக இருப்பதால், திரும்பத் திரும்பத் திரும்பத் திரும்ப ஏழெட்டுப் பாட்டுக்களை வருஷக் கணக்காகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். தோற் காது உள்ள தேசங்களிலே இந்தத் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

'பூர்வீக மஹான்களுடைய பாட்டுகளை மறந்து போய்விட வேண்டும்' என்பது என்னுடைய கக்ஷியன்று. அவற்றை அர்த்தத்துடன் பாடவேண்டும். பதங்களைப் பிழையாக உச்சரிக்கக் கூடாது. பதங்களை வாய்விட்டுத் தெளிவாகச் சொல்லவேண்டும். விழுங்கி விடக்கூடாது. பத்து முப்பது கிர்த்தனங்களையே ஓயாமற் பாடி ஸங்கீதத்தை ஒரு தொல்லையாகச் செய்து விடக்கூடாது.

புதிய புதிய கிர்த்தனங்களை வெளியே கொண்டுவர வேண்டும். இப்போது ஸங்கீத வித்வான்களிலே தலைமைப் பட்டிருப்போர் தமிழிலே புதிய மெட்டுக்களில் கிர்த்தனங்கள் செய்ய முயல வேண்டும். நவரஸங்களின் தன்மைகளையும், இன்னின்ன விதங்களிலே பாடினால், இன்னின்ன ரஸங்கள் உண்டாகும் என்பதையும் கற்றுத் தெரிந்து கொள்ளுதல் அவசியம்.

'பூர்வ காலத்து மஹான்களுக்குத் தெய்வப் பிரஸாதமிருந்தது. எங்களுக்கில்லையே. என்ன செய்வோம்?' என்று புதிய வித்வான்கள் புதிய கிர்த்தனங்கள் அமைப்பதிலே பின்வாங்கக்கூடாது. தெய்வங்கள் இறந்துபோகவில்லை. இப்போதும் அவற்றை உபாஸனை செய்து அவற்

றின் அருள் பெறலாம். தெய்வப் பிரஸாதத்தை ஒருவன் பக்தியாலும், ஜீவதயையாலும், நேர்மையாலும், உண்மையாலும், இடைவிடாத உழைப்பினாலும் ஸம்பாதிக்க முடியும்.

"நாட்டிலே ஸங்கீதத்திற்குச் சரியான போஷணை செய்யும் ராஜாக்களும் பிரபுக்களும் இல்லை. எங்களுக்கு ஜீவனமோ கஷ்டமாயிருக்கிறது. மனக் கஷ்டம் இல்லாமல் இருந்தாலன்றோ ரஸஞானத்தை வளர்த்துக் கொண்டு போகலாம்? சில வருஷங்களுக்குள்ளே சில கிர்த்தனங்களை வரப்படுத்திக்கொண்டு ஜீவனத்திற்கு வழிதேடவேண்டிய ஸ்திதி ஏற்பட்டிருககிறது. என்ன செய்யலாம்?" என்று நினைத்து மனமுடைந்து போகவேண்டாம்.

இப்போது உலக முழுவதிலுமே ராஜாக்களையும் பிரபுக்களையும் நம்பி வித்தை பழகும் காலம் போய்விட்டது. பொது ஜனங்களை நம்பவேண்டும். இனிமேல் கலைகளுக்கெல்லாம் போஷணையும் ஆதரவும் பொது ஜனங்களிடமிருந்து கிடைக்கும். அவர்களுக்கு உண்மையான அபிருசி உண்டாக்கிக் கொடுப்பது வித்வான்களுடைய கடமை. பிறகு, நல்ல போஷணை கிடைக்கும். ஒரு பிரபு மாதம் ரூபாய் 100 கொடுப்பான். ஊர் சேர்ந்தால் தலைக்குக் கால் ரூபாயாக வசூல் பண்ணி மாதம் 1000 ரூபாய் கொடுக்கும். ஊரையே யஜமானனாகக் கொள்ள வேண்டும்.

ஊர்தான் ராஜா. இந்த ராஜாவுக்கு ஆரம்பத்திலே கொஞ்சம் ஞானம் அளித்துப் பழக்கங் கொடுத்தால், வித்தைகளுக்கு எவ்விதமான குறைவும் ஏற்படாது. நவ ரஸங்களும் சேரவேண்டும். கருணா ரஸமும் (அதாவது சோகரஸமும்) சிருங்கார ரஸமுந்தான் நமது தேசத்தில் நடை பெறுகின்றன. மற்ற வீரம், கோபம் (ரௌத்ரம்) வியப்பு, வெறுப்பு, அச்சம், நகைப்பு, சாந்தம் என்ற ரஸா

னின் விலாஸம் பாட்டிலே காணப்படவில்லை. நல்ல பாட்டுப் பாடினால் நல்ல மதிப்புத் தானகவே வரும். அதி லிருந்து நல்ல வரும்படி ஏற்படும்.

திருஷ்டாந்தமாக: ஹாஸ்ய ரஸம் தோன்றும்படி ஒரு ராகத்தை விஸ்தரிக்கும்போது, அதிலே அர்த்தச் சேர்க்கை யில்லா விடத்தும் ஜனங்கள் கடகடவென்று சிரிக்க வேண்டும்.

ரௌத்ர ரஸம் தோன்றும்படி பாடினால், அதைக் கேட்கும்போது, ஜனங்களுக்கு மீசை துடிக்க வேண்டும்; கண்கள் சிவக்கவேண்டும்.

வீர ரஸமுள்ள பாட்டை ஒரு வித்வான் பாடும்போது, ஜனங்களெல்லாம் தம்மை யறியாமல் முதுகு நிமிர்ந்து தலைதூக்கி உட்கார வேண்டும். அவர்கள் விழியிலே வீரப் பார்வை உண்டாக வேண்டும். அப்போதுதான் பாட்டு ஸபலமாகும்.

பொருளிலும், ஓசையிலும் 'ரஸம்' கலக்காத பாட்டு இனிமேல் தமிழ் நாட்டிலேயே வழங்கலாகாது.

முத்துசாமி தீக்ஷிதர், தியாகையர், பட்டணம் சுப்பிர மணிய அய்யர்—இந்த மூன்று பெயருடைய கீர்த்தனை களைத்தான் வழக்கத்தில் அதிகமாய்ப் பாடுகிறார்கள். இவற்றுள்ளே, தீக்ஷிதரின் கீர்த்தனைகள் பச்சை ஸம்ஸ் கிருத பாஷையிலே எழுதப்பட்டவை. இவை கங்கா நதி யைப்போலே கம்பீர நடையும் பெருந்தன்மையும் உடை யன. வேறு பல நல்ல லக்ஷணங்களும் இருந்தபோதிலும், ஸம்ஸ்கிருத பாஷையில் எழுதப்பட்டிருப்பதால் இவை நமது நாட்டுப் பொது ஜனங்கள் ரஸானுபவத்துடன் பாடு வதற்குப் பயன்படமாட்டா.

தியாகையர் தெய்வ வரம் பெற்றவர். தியாகையர் ரஸக்கடல். கர்நாடக ஸங்கீதம் இப்போது உயிர் தரித்திருப்பதற்கு அவரே காரணம். பூர்வகாலத்து ஞானிகளைப் போலே, இவர் இஷ்ட தேவதைக்கு ஆத்ம யக்ஞம் செய்து, தான் அற்று, வித்தை வடிவாகி விளங்கினர். இவருடைய பாட்டுக்களை இக் காலத்துப் பாடகர் அதிக 'ஸங்கதி'களாலும் ரஸநாசத்தாலும், சொற்களைத் திரித்தல், விழுங்குதல் முதலிய செய்கைகளாலும, இயன்றவரை ஆபாசமாக்கிவிட்ட போதிலும், இன்னும் அவற்றிலே பழைய ஒளி நிற்கத்தான் செய்கிறது, குப்பையிலே கிடந்து மாசேறி ஒளி மங்கிப் போயிருந்த போதிலும், மாணிக்கத்தின் குணம் ரத்னப் பரீக்ஷைக்காரனுக்குத் தெரியாதா? அதுபோலவே, ரஸ உண்மை தெரிந்தோர் இத்தனை குழப்பத்துக்கிடையே தியாகையருடைய தொழிலின் ஸ்வரூபத்தை நன்கு கண்டு பிடித்துக்கொள்ள முடியும். கீர்த்தனத்தில் ராகதாளங்களை இசைத்திருக்கிற மாதிரியிலேயே அர்த்தம் தொனிக்க வேண்டும். அதைத்தான் ரஸச் சேர்க்கை என்று சொல்லுகிறோம். இதிலே தியாகையர் மிகவும் சிறப்புக்கொண்டவர்.

திருஷ்டாந்தமாக, 'சக்கனி ராஜமார்க்கமு' என்ற கீர்த்தனத்தை எடுத்துக் கொள்ளுவோம். அதிக ஸங்கதிகளும், பின்னல்களும் இல்லாமல் இதன் பல்லவியை சுத்தமாகப் பாடிப் பாருங்கள். "நல்ல ராஜமார்க்கம் இருக்கும் போது சந்துகளில் ஏன் சுற்றுகிறாய், மனதே?" என்று அர்த்தம் அந்த இசையிலே அகப்படும்.

'மாருபல்க குன்னுவேமி' (ஏன் மறுமொழி சொல்லாமல் இருக்கிறாய்?) என்ற கீர்த்தனத்தின் பல்லவியைப் பாடிப் பாருங்கள். அந்த அர்த்தம் இசையிலே தொனிக்கும்.

'நன்னுப் ப்ரோவ நீகிந்த தாமஸமா' (என்னைக் காக்க உனக்கு இந்த தாமஸமா?) என்ற பல்லவி எடுத்தவுடனேயே அர்த்தம் பளிரென்று வீசும்.

இப்படியே எல்லாக் கீர்த்தனங்களும் ஏற்பட்டிருக்கின்றன. இந்த மாதிரி ஏற்படுத்தவேண்டும் என்று தியாகையர் சிரமப்பட்டு வேலை செய்யவில்லை நெஞ்சிலே உண்மையிருந்தால் ஸங்கீதம் இயற்கையிலே இவ்விதமாகப் பிறக்கும்.

பிற்காலத்தில், பட்டணம் சுப்பிரமணிய அய்யர் முதலானவர்களின் பாட்டிலே இந்த லக்ஷணம் இல்லை. 'வரமுலொஸகி' என்ற பாட்டை எடுத்தீர்களானால், இசைக்கும் பொருளுக்கும் சம்பந்தமே இல்லை என்பது விளங்கும். சொற்கள், 'வரங்கொடுத்துக் காப்பது உனக்கு அரிதா?' என்று கேட்கின்றன. இசை சண்டைத் தாளம் போடுகிறது. இது நிற்க.

வித்வான்கள் பழைய கீர்த்தனங்களைப் பாடம் பண்ணி புராதன வழிகளைத் தெரிந்துகொள்ளுதல் அவசியம். ஆனால் தமிழ்ச் சபைகளிலே எப்போதும் அர்த்தம் தெரியாத பிற பாஷைகளில் பழம் பாட்டுகளை மீட்டும் மீட்டும் சொல்லுதல் நியாயமில்லை. அதனால் நமது ஜாதி ஸங்கீத ஞானத்தை இழந்துபோகும்படி நேரிடும்.

மேலும், 'பாட்டுக்குத் தாளமே யொழிய தாளத்திற்குப் பாட்டில்லை' என்ற விஷயத்தைப் பாடுவோர் நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். சிலவிதக் கூத்துக்களிலே, தாளத்திற்குப் பாட்டுப் பாடுதல் பொருத்தம். அங்கேகூட, முழுதும் தாள நயத்தையே கருதி இசை நயத்தை நாசம் செய்துவிடக்கூடாது. அப்படியிருக்க, 'பாட்டுக் கச்சேரி' என்று பெயர் வைத்துக்கொண்டு அங்கே இசையின்பங்களைக் கொன்று தாள முழக்கத்தைப் பிரதானமாக்குதல்

தகாது. அதிலும் கீர்த்தனங்களைப் பாடும்போது இசை யின்பங்களைக் காட்டுதல் முதல் காரியமாகவும், தாளத்தை உபகரணமாகவும் கொள்ளவேண்டும்.

சுமார் 12 வருஷங்களுக்கு முன்பு நான் இரண்டு மூன்று வருஷம் ஸ்ரீகாசியில் வாஸஞ் செய்தேன். அங்கே, பாட்டுக் கச்சேரி செய்ய வரும் ஆண்களுக்கெல்லாம் நேர்த்தியான வெண்கலக் குரல் இருந்தது. பெண்களுக்கெல்லாம் தங்கக் குரல். அங்கிருந்து தென்னாட்டிற்கு வந்தேன். இங்கே ஓரிரண்டு பேரைத் தவிர மற்றப்படி பொதுவாக வித்வான் களுக்கெல்லாம் தொண்டை சீர்கெட்டிருப்பதைப் பார்க்கும் போது, எனக்கு மிகவும் வியப்புண்டாயிற்று. ஒன்றுபோல எல்லோருக்கும் இப்படித் தொண்டை வலிமை குறைந்தும் நயங் குறைந்தும் இருப்பதன் காரணமென்ன? இதைப் பற்றிச் சில வித்வான்களிடம் கேட்டேன். "வடநாட்டில் சர்க்கரை, பால், ரொட்டி, நெய் சாப்பிடுகிறார்கள்: புளியும் மிளகாயும் சேர்ப்பதில்லை; இங்கே புளி, மிளகாய் வைத்துத் திட்டுகிறோம். அதனாலே தான் தொண்டை கெட்டுப் போகிறது" என்றனர். பின்னிட்டு நான் யோசனை செய்து பார்த்ததில், 'மேற்படி காரணம் ஒரு சிறிது வாஸ்தவம் தான்' என்று தெரிந்து கொண் டேன். ஆனால் அதுவே முழுக்காரணம் அன்று. நம்மவர் தொண்டையை நேரே பழக்குவதில்லை. காட்டு வெளி களிலே போய், கர்ஜனை செய்யவேண்டும். நதி தீரங்கள், ஏரிக்கரை, கடற்கரைகளிலே போய்த் தொண்டையைப் பழக்கவேண்டும். சாஸ்திரப்படி அஹார ஸாதனம் செய் யும் வழக்கம் தென்னாட்டிலே குறைவுபட்டிருக்கிறது.

தவிரவும், உள்ளத்திலே வீரம் இருக்கவேண்டும். உள் ளத்திலே ஸத்து இல்லாதவர்களுக்கு ஒருதொழிலும் நேரே வராது. கலைகள் நேர்ப்படுவதைப் பற்றிப் பேச வேண்டிய

தில்லை. உள்ளத்திலே தைரியம், ஸந்தோஷம், வலிமை முதலிய சுப லக்ஷணங்கள் தமிழரைக் காட்டிலும் வட நாட்டு ஜனங்களிடம் சிறிது அதிகமாகத் தோன்றுகின்றன. முன்னெல்லாம் தமிழ் நாட்டிலேதான் இந்த குணங்கள் மிகவும் விசேஷமாக விளங்கின. இப்போது சில வருஷங்களாகக் குறைவு பட்டிருக்கின்றன. இந்த குணங்களை நமது ஜனங்களெல்லோரும் பயிற்சி செய்து கொள்ள வேண்டும். ஸங்கீத வித்வான்கள் இவற்றைப்பழக்கப் படுத்தினால்தான் அவர்கள் கண்டத்தில் உவகையும் வீரமும் பிறக்கும்; பாட்டிலே களையுண்டாகும்.

## 2

தமிழ்நாட்டு வித்வான்களுடைய ஸங்கீதத்தைப் பற்றி மேலே எழுதினேன். மற்ற சாதாரண ஜனங்கள் பாடும் பாட்டைப் பற்றிக் கொஞ்சம் ஆராய்ச்சி செய்ய விரும்புகிறேன். இந்தப் புதிய பகுதி தொடங்கு முன் மேற்படி சங்கீத வித்வான்களிடம் உள்ள நன்மையையும் சொல்ல வேண்டாமா? பெயர்கள் குறிப்பிடாதது பற்றி மன்னிப்பு வேண்டுகிறேன். கன்னியாகுமரி முதல் சென்னை வரை தமிழ்நாட்டில் உள்ள ஜில்லாக்களிலே ஒவ்வொன்றிலும் இக்காலத்தில் கருவிகளிலும்வாய்ப்பாட்டிலும் புகழ்பெற்ற வித்வான்கள் பலர் இருக்கின்றனர்.

காலத்தின் சீர்கேட்டாலும், ஸம்ப்ரதாய பங்கத்தினாலும் நவரஸங்களுக்கும், பாட்டுக்கும் உள்ள தொடர்பை மறந்து விட்டபோதிலும், இவர்களிலே சிலர் (ஆணும் பெண்ணும்) ஸரஸ்வதி கடாக்ஷத்தினால் தம்மை அறியாமலே அற்புதமான வேலை செய்கிறார்கள். சில சமயங்களில் ஓரிரண்டு ரஸங்களைத் தெரிந்தே பாட்டில் இசைக்கிறார்கள். அப்போது இவர்களுடைய பாட்டு அல்லது வாத்தியம்

**மிகவும் உயர்ந்த நிலையடைகிறது. ஸமீப காலத்திலே இறந்துபோன மஹா வைத்யநாதய்யர், புல்லாங்குழல் சரப சாஸ்திரி முதலிய மஹான்களுக்கு இப்போதுதக்க பின் காப்பாளர் இல்லாமற் போகவில்லை.**

# 3

ஆனால், இவர்கள் நான் முன்னிரண்டு பகுதிகளில் குறிபிட்ட செய்திகளையும் தயவுசெய்து கவனிக்கும் பக்ஷத்தில் தமிழ்நாட்டுக்கு இவர்கள் செய்துவரும் உபகாரம் பல மடங்கு அதிகப்படுமென்பதும், அப்படி அதிகப்படவேண்டு மென்பதும் என்னுடைய கருத்து; அதைத் தெரிவித்துக் கொண்டேன்.

இனி சாஸ்திரோக்தமாகப் பாடும் வித்வான்கள் அல்லாமல் ஸாமான்யமாகப் பாடும் பொது ஜனங்களுடைய செய்தியைப் பார்ப்போம்.

முதலாவது, நமது குடும்ப ஸ்திரீகளின் பாட்டையெடுத்துக் கொள்வோம். கல்யாணப் பாட்டுக்கள், கும்மிப்பாட்டுகள் முதலியவற்றுடன் நமது பெண்கள் "கீர்த்தனை" வகைகளும் கொஞ்சம் பாடுகிறார்கள். இதில் ஒரு சில பெண்கள் நல்ல லக்ஷணத்துடன் பாடுகிறார்கள் என்பதில் ஆக்ஷேபமில்லை. ஆனால், பெரும்பான்மையோர் ஸங்கீத லக்ஷணமே தெரியாமல் தவறாகப் பாடுகிறார்கள். பெரும்பான்மையோருக்குத் தொண்டை நன்றாகப் பழகவில்லை. பெரும்பான்மையோருக்குப் படிப்பு மிகவும் குறைவாகவும் சூனியமாகவும் இருப்பதால் இவர்கள் பாடும் பாட்டுக்களிலே சொற்பிழையும் பொருட்பிழையும் மொய்த்துக் கிடக்கின்றன. அதிலும், இவர்கள் தீக்ஷிதர், தியாகையர் முதலியவர்களின் கீர்த்தனங்கள் பாடும்போது, தாளம், சுருதி ஒன்றை

யும் கவனிக்காமல் பதங்களைச் சூறையாடி மிகவும் விகாரப் படுத்தி விடுகிறார்கள். ஆனாலும், ஆனாலும், ஆனாலும் தமிழ் நாட்டு ஸ்திரீகளின் ஸங்கீதத்தை நாம் புகழாதிருக்க லாகாது. இவர்கள் பாடும் பாட்டிலே பெரும்பான்மைக் கீர்த்தனங்களும், பத்யங்களும் தெலுங்கில் இருந்தபோ திலும், தமிழ்ப்பாட்டுத்தான் அதிகமாகப் பாடுகிறார்கள்.

இந்தத் தமிழ்ப் பாட்டிலே பல பிழைகள் மலிந்து கிடந்தாலும், ஒரு சில பாட்டுக்கள் மிகவும்நன்றாக அமைந் திருக்கின்றன. 'ஓடம்' முதலியவற்றில் அதிஸமீப காலத் துப் பாட்டுக்கள் மிகவும் விகாரமாயிருந்தாலும், பழைய காலத்துப் பாட்டுகளிலேயே சொல் நயம் அதிகம் இருக் கிறது. பின்னிட்டு "ரயில் வண்டி ஓடம்" முதலிய அசுத்தங் கள் அதிகமாகச் சேர்ந்து விட்டன. இங்கிலீஷ் படித்த புருஷர்கள் கேட்டு மடத்தனமாகச் சந்தோஷப்பட்டதி லிருந்து பெண்களுக்கு இந்தமாதிரி விரஸங்களிலே பற்றுதல் உண்டாயிற்று.

கும்மிப்பாட்டு, பல்லிப்பாட்டு, கிளிப்பாட்டு, நலங்குப் பாட்டு, பள்ளியறைப்பாட்டு, அம்மானைப்பாட்டு, தாலாட் டுப்பாட்டு முதலிய பெண்களுடைய பாட்டெல்லாம் மிகவும் இன்பமான வர்ணமெட்டு. தமிழர்களின் தாய், அக்காள், தங்கை, காதலி முதலிய இவர்கள் பாடும் பாட்டு மறக்கக் கூடிய இன்பமா? ஞாபகம் இல்லையா?

தமிழ்ப் பெண்களின் பாட்டைக்கையெடுத்து வணங்கு கிறோம். ஆனால் அதில் ஏற்படுத்த வேண்டிய சீர்திருத்தங் கள் பல இருக்கின்றன.

## தாளஞானம்

நமது குடும்ப ஸ்திரீகளின் பாட்டிலே முக்கியமான குறை என்ன வென்றால் இவர்களிலே பெரும்பாலோருக்குத் தாள ஞானமில்லை.

பெண்களுக்குத் தாளஞானம்ஏற்படுத்திக் கொடுப்பது மிகவும் சிரமமென்றும், இயற்கையிலே அவர்களுக்கு "லய வுணர்ச்சி" கொஞ்சம் குறைவென்றும் சிலர் தப்பாகநினைக்கிறார்கள். பெண்கள் குதித்துப் பாடும்போது பாருங்கள். 'டணீர் டணீர்' என்று எப்படித் தாளம் விழுகிறது. நமது பெண்கள் கீர்த்தனங்கள் முதலியவற்றைத் தாளமில்லாமற் பாடுவதற்குக் காரணம் பயிற்சிக் குறைவேயல்லாது வேறொன்றுமில்லை. அவர்களுக்கு நாம் சரியானபடி பாட்டுக் கற்றுக் கொடுப்பதில்லை.

"தாஸிகளா? கச்சேரி நடத்தப்போகிறார்களா? தாளம் தவறாமல் பாடி என்ன ஆகவேண்டும்?" என்று சிலர் பேசுவதுண்டு. தாளம் தவறிப் பாடினால் காதுக்கு விரஸமாக இருக்கும். ஜனங்களுக்குப் பிரிய முண்டாகாது. வீட்டிலும் அதே காரணந்தான். எனது மகள் பிழையாகப் பாடினால், பக்கத்தில் இருந்து கேட்கும் எனது காதுக்கு ஸுகப்படாது. அவளுக்கும் பாட்டில் நல்ல ருசி ஏற்படாது.

பெண்கள் பாடவே கூடாதென்று ஒரேயடியாக நிறுத்திவிட்டீர்களானால் ஒரு தொல்லையுமில்லை. பிறகு உலக வாழ்வுமில்லை. கல்யாணப் பாட்டுக்களும், தாலாட்டுப் பாட்டுக்களும், காதற் பாட்டுக்களும் நின்றுபோனால், பிறகு சுடுகாடுதான் மிச்சமிருக்கும். அப்படி நிறுத்த வேண்டுமென்று எவனும் விரும்பமாட்டான். ஆண்களைப் போலவே பெண்களும் எப்போதும் பாடத்தான் செய்வார்கள். ஆணைக் காட்டிலும் பெண்ணுக்கு ஸங்கீதத்திலே அதிகத் தொடர்பு உண்டு. "செய்வன திருந்தச் செய்." பாட்டுப் பாடவிரும்புவோர் நல்ல பாட்டிற் பழகவேண்டும். பாட்டுக் கேட்க் விரும்புவோர் நல்ல பாட்டுக் கேட்கவழி தேடவேண்டும். பாட்டினால் மகிழ்ச்சி உண்டாகிறது. லக்ஷ்மீ கடாக்ஷம் ஏற்படுகிறது; உபசாந்தி பிறக்கிறது.

# 4

## ஹார்மோனியம்

தமிழ்நாட்டு மாதர்களுக்குள்ளே நல்ல பாட்டுவளர்ச்சி பெறவேண்டும் என்பது என்னுடைய விருப்பம். ஆனால், அதற்கு ஹார்மோனியப் பெட்டி ஒரு விக்கினமாக வந்து சேர்ந்திருக்கிறது. இந்தப் பெட்டி நமது நாட்டிலே பழகுவதினால் சங்கீதத்திற்குப் பல விதமான தீங்கு உண்டாவதாக வித்வான்களிலே பெரும்பாலோர் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் அதை நிறுத்துவதற்கு யாரும் வழி தேடவில்லை. நமது ஸங்கீதத்திலுள்ள சுருள்கள் வீழ்ச்சிகள் முதலியவற்றை ஹார்மோனியத்தில் காட்டமுடியாது. ஆதலால், அந்த வாத்தியத்தில் அதிகம் பழக்கமுடையோரிடம் நமது ஸங்கீதத்தில் உள்ள விசேஷ நயங்கள் மங்கிப் போகின்றன. இதையெல்லாங்காட்டிலும், அந்தப் பெட்டி போடுகிற பெருங்கூச்சல்தான் என் காதுக்குப் பெரிய கஷ்டமாகத் தோன்றுகிறது.

மேலும், ஸங்கீதத்திலே கொஞ்சமேனும் பழக்கமில்லாதவர்களுக்கெல்லாம் இந்தக் கருவியைக் கண்டவுடனே "ஷோக்" பிறந்து விடுகிறது. சத்த முண்டாக்குவதற்கு நல்ல துருத்தி கைக்கு ஒத்ததாகப் பின்னே வைத்திருக்கிறது. ஒரு கட்டையை உள்ளே அழுத்தி, முன் பக்கத்துச் சாவிகளை இழுத்துவிட்டு, துருத்தியை அசைத்தால், "ஹோ" என்ற சத்த முண்டாகிறது. உடனே பாமரனுக்கு மிகுந்த சந்தோஷ முண்டாகிறது. "நாம் அல்லவா இந்த இசையை யுண்டாக்கினோம்?" என்று நினைத்துக் கொள்கிறான். உடனே வெள்ளைக் கட்டைகளையும் கருப்புக் கட்டைகளையும் இரண்டு தட்டுத் தட்டுகிறான். பேஷான தொனிகள்! மேலான தொனிகள்! பாமரன் பூரித்துப் போகிறான். முதல் நாள், முதல் தடவை, தொட்ட மாத்

திரத்திலே இவ்வளவு கோலாஹலம் உண்டாகிறது. பிறகு ஸரளி, அலங்காரம், பிள்ளையார் கீதம், சங்கராபரண வர்ணம், 'பவநுத' கீர்த்தனம்—இத்தனையும், ஹார்மோனியத்தில் மூன்று மாதத்திற்குள் பழக்கமாய் விடுகிறது. பாமரனின் மனதிலே "நாம் ஒரு வித்வான்" என்ற ஞாபகம் உறுதியாகப் பதிந்து விடுகிறது. ராக விஸ்தாரங்களைத் தொடங்கி விடுகிறான். ஒரு வீட்டில் "ஹார்மோனியம்" வாசித்தால் பக்கத்திலே ஐம்பது வீட்டுக்குக் கேட்கிறது. அறியாதவன் தனது அறியாமையை வீட்டில் இருந்தபடியே இரண்டு மூன்று வீதிகளுக்குப் பிரசாரம் பண்ண வேண்டுமானால், அதற்கு இந்தக் கருவியைப்போலே உதவி வேறொன்றுமில்லை. வீணை தவறாக வாசித்தால் வீட்டில் உள்ள ஜனங்களுக்கு மாத்திரந்தான் துன்பம்; ஹார்மோனியம் தெரு முழுவதையும் ஹிம்ஸைப் படுத்திவிடுகிறது. ஒரு தேசத்தாரின் செவியைக் கெடுத்து ஸங்கீத உணர்ச்சி குறையும்படி செய்ய வேண்டுமானால், கிராமந்தோறும் "நாலைந்து ஹார்மோனியம்" பரவும்படி செய்தால்போதும்.

நாடகக்காரர் வாய்ப்பாட்டுக்குச் சுருதி போடும் பொருட்டு இதை வைத்துக் கொள்ளுதல் ஒரு வேளை பொருந்தும். ஸாமான்ய ஜனங்கள் இதை சுருதிக்கு வைத்துக் கொள்வதனால் பல தீங்குகள் உண்டாகின்றன. இத்தீங்குகள் யாவை என்பதையும் நமது நாட்டுக்குப் பொருத்தமான வாத்தியங்கள் எவை என்பதையும், பெண்கள் பாட்டை நேராக்குவதற்கு இன்னும் என்ன வழிகள் தேடவேண்டுமென்பதையும் ஆராய்ச்சி செய்வோம்.

## தம்பூர்

நாடகக்காரர் தவிர மற்ற ஸாமான்ய ஜனங்கள் வீடுகளிலும் பஜனைக் கூடங்களிலும் பாடும்போது தம்பூர் சுருதி வைத்துக் கொள்வதே பொருந்தும். ஹார்மோனியம்

பேரிரைச்சல் போடுவதிலே பாட்டின் சத்தம் கணீரென்று கேட்பதில்லை. பாட்டுக் கீழாகவும் சுருதி மேலாகவும் நிற்கிறது. அஸாதாரணமான உச்ச சாரீரமுடைய சிலர் மாத்திரமே ஹார்மோனியத்தின் சுருதிக்கு மேலே பாடக் கூடும்; பொதுப்படையாக சாத்தியமில்லை. பாட்டுக்கு உதவியாக சுருதி ஒலிக்கவேண்டும். பாட்டை விழுங்கும் சுருதி பிரயோஜனமில்லை. அது வெறும் மடமை.

## வீணை

வாத்தியம் படிக்க விரும்பும் ஸ்திரீகள் வீணை பழக வேண்டும். வீணை ஆரம்பத்திலே கொஞ்சம் சிரமம். போகப் போக ஸுலபமாய் விடும். இந்தக் கருவியிலே தேர்ச்சியேற்பட்டால் அதுதான் வாஸ்தவமான ஸங்கீதத் தேர்ச்சியாகும். பெண்கள் வீணை வாசிப்பதினால், நாட்டிலே ரஸப்பயிற்சியும் வாழ்க்கை நயமும் உண்டாகும். மைசூரிலும் மலையாளத்திலும் பழகியவர்களுக்கு, 'பெண்கள் வீணை கற்றுக் கொள்ளுதல் சிரமமில்லை' என்பது தெரியும். வீணை பழகினால் அதிலேயே நல்ல தாளஞானம் உண்டாய் விடும். வீணை மனிதர் குரல் போலவே பேசும். இன்பச் சுருள்களுக்கும் பின்னல்களுக்கும் வீணை மிகவும் பொருத்தமானது. அதன் ஒலி சாந்திமயமானது. ஸரஸ்வதி தனது கையில் வீணையை தரித்துக்கொண்டிருக்கிறாள். காளிதாஸ கவி பராசக்தியைப் பாடும்போது "மாணிக்ய வீணாம் உபலாலயந்தீம்" என்று தொடங்குகிறார்.

## பொய்த் தொண்டை

ஆணாயினும் பெண்ணாயினும் கள்ளத்தொண்டை வைத்துக்கொண்டு பாடலாகாது. தொண்டையைத் திறந்து பாடினால்தான் சுகமுண்டாகும். இயற்கையிலே ஆணுக்குக் கனமாக குரலும், பெண்ணுக்கு ஸன்னமான

குரலும் ஏற்பட்டிருக்கின்றன. பெண்களிலே சிலர் இயற்கை ஸன்னத்தை அதிக ஸன்னப்படுத்த வேண்டுமென்று கருதிக் கள்ளத் தொண்டையிற் பாடுகிறார்கள். வேறு சிலர் லஜ்ஜையினாலே கள்ளத் தொண்டைக்கு வந்து சேருகிறார் கள். இதுவும் தவறேயாம். தொண்டையைத் திறந்து தெளிவாகப் பாடுவதிலே லஜ்ஜைப்பட யாதொரு நியாயமு மில்லை.

# 5

## பெண்ணின் பாட்டு

### இதிலுள்ள வகுப்புக்கள்

இருபாலருக்கும் பொதுவான சந்தங்கள் இருப்பதுடன், பெண்களுக்கு.மாத்திரம் சிறப்பான பாட்டுக்களும் சந்தங் களும் இருக்கின்றன. பண்டைத் தமிழ் நாட்டு மாதர் பாடிக்கொண்டிருந்த பல பாட்டு வகைகள் இப்போது வழக்கின்றி இறந்து போய்விட்டன.

ஆனால், ஜீவன் பெண்ணென்றும், பரமாத்மா ஆணென்றும் பாவனை செய்து பழைய பக்தர் பாடியிருக்கும் பாட்டுக்களில் பெண்களுக்குரிய சில பாட்டு வகைகள் காணப்படுகின்றன.

திருஷ்டாந்தமாக, திருவாசகத்திலே பின்வரும் வகை கள் காணலாம்.

(1) எம்பாவை பெண்கள் நீராடப்போவது).

(2) அம்மானைப் பாட்டு.

(3) தும்பி, குயில், கிளி முதலிய தூதுப் பாட்டுகள்.

(4) தெள்ளேணம் (நடுவே ஒரு பெரிய முரசை வைத்துக்கொண்டு, பெண்கள் சுற்றியிருந்து இரண்டு கைகளிலும் கோல் கொண்டு கொட்டி அந்தத் தாளத்திற்கு இசையப் பாடுதல்.)

(5) சுண்ணம் இடித்தல். சுண்ணமென்பது சுந்தப் பொடி.

(6) சாழல்.

(7) உந்தி.

(இவ்விரண்டும் பெண்களுடைய விளையாட்டு என்று தெளிவாகிறது. ஆனால் விளையாட்டின் விவரங்கள் தெரியவில்லை.)

(8) பூவல்லி (பெண்கள் பூக் கொய்யும்போது பாடுவது.)

(9) தோணோக்கம் (பெண்கள் தோள் கோத்துப் பாடிக் குதிப்பது.)

(10) ஊசல் (இதை இக்காலத்தில் "ஊஞ்சற் பாட்டு" என்கிறோம்.)

(11) காலைத் துயில் எழுப்பும் பாட்டு.

இங்ஙனம், தாலாட்டு, அம்புலி, செங்கீரை, சப்பாணி முதலிய வேறு பல வகைகளுமிருந்தன. 'பிள்ளைத் தமிழ்' என்ற நூல் வகுப்பைக் காண்க. இவற்றிலே; தாலாட்டு, ஊஞ்சல், அம்மானை, பள்ளியெழுச்சி என்ற நான்கு வகையும் வெவ்வேறு சந்தங்களுடன் இக்காலத்தில் நமது பெண்களுக்குள் வழங்கி வருதல் காண்கிறோம். பழைய காலத்து வகைகளை நாம் விஸ்தாரமாகக் கவனிப்பதற்கு வேண்டிய ஸௌகரியங்கள் இல்லை. ஆதலால், பெயர் மாத்திரமே குறிப்பிட்டிருக்கிறோம்.

குடும்பத்துப் பெண்களிலே சாஸ்திரப்படி ஸங்கீதம் கற்றுக்கொள்வோரின் தொகை மிகவும் குறைவு. நகரப் பழக்கமும் சுக ஜீவனமும் உடைய குடும்பங்களில் மாத்திரமே பெண்களுக்கு வாத்தியார் வைத்துப் பாட்டுக் கற்றுக் கொடுக்கிறார்கள். ஆயினும், வாத்தியார் இல்லாமல் சாஸ்திர வழிகளில் வாஸனை ஏற்பட்டவர் பலர் உண்டு.

இவர்களை யல்லாது, பொதுப் படையாகப் பார்க்குமிடத்து, நமது மாதர் பாட்டுக்களின் இனம் பின்வருமாறு:

(1) கல்யாணப் பாட்டு.

நலங்கு, பத்யம், ஊஞ்சல், ஓடம் முதலியன.

(2) கும்மிப் பாட்டு. குதித்துப் பாடுகிற பாட்டுக்கள்.

இவ் வகுப்பில், கிளிப் பாட்டு, பல்லிப்பாட்டு முதலியனவும் அடங்கும்.

(3) அம்மானை, தூது, மாலை, சோபனம் முதலிய நீண்ட கதைப் பாட்டுக்கள்.

(4) பொதுத் தாலாட்டு, விளையாட்டுப் பாட்டுக்கள், ஜாவளிகள், கீர்த்தனை முதலியன.

மேலும், பண்ணைகளில் வேலை செய்யும் பெண்கள், நெல் குத்துவோர், சுண்ணாம்பு இடிப்போர், குறிகாரி, தொம்பச்சி முதலிய வகுப்பினர் தமக்கென்று தனியான மெட்டுக்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். மேற்கூறப்பட்ட பாட்டுக்களில் மிக இன்பமான சந்தங்கள் பல இருக்கின்றன. இவை கால வெள்ளத்தில் மறைந்துபோகு முன்பாக ஸங்கீத வித்வான்கள் பொறுக்கியெடுத்து ஸ்வர நிச்சயம் செய்து வித்தைப் பழக்கத்திலே சேர்த்து விட வேண்டும்.

# ௬

பெண்களுக்குக் கல்விப் பயிற்சி ஏற்பட்டால் அப்போதுள்ள கொச்சை மொழிகளும், பிழைகளும், ரஸக் குறைவும் பொருந்திய பாட்டுகளை மறந்து விடுவார்கள். ஆனல், அத்துடன் பழைய ஸங்கீதக்கட்டுக்களை மறந்து போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பழைய வழிகளை முற்றிலும் மறந்துபோய் நமது பெண்கள் நாடக மெட்டுக்கள் முதலியவற்றையே பாடத் தொடங்கிவிட்டால், தமிழ் நாட்டில் ஸங்கீத வுணர்ச்சி நாசமாய்விட ஹேது உண்டாகும்.

கொச்சை மொழிகளும் ரஸக் குறைவும் மலிந்த பாட்டுக்களென்று சொன்னோம். ஆனல் ஒரு கூடைப்பதரில் ஒருழக்கு அரிசியகப்படும். அதை நாம் இழந்துவிடக்கூடாது. கவிதைத் தேட்டமுடையோர் நமது பெண்களின் பாட்டைத் தேடிப் பார்த்தால், சிற்சில விடங்களில் நல்ல கவிதை கிடைக்கும். பாட்டி, ராமாயணத்தில் குசலவரின் கதையை ஒரு நீளப்பாட்டாகச் சொல்லுவாள். அதில சீதையின் கஷ்டங்களைக் கேட்கும்போது குழந்தைகளெல்லாம் கண்ணீர் விட்டழும். ராமனைக் குசலவர் வெல்லும் இடத்து வரும்போது மனதிலே ஆத்திரம் பொங்கும். 'ராமனுக்கு வேணும்; நன்ருக வேணும்' என்று தோன்றும். நலங்குப் பாட்டு, கும்மி முதலியவற்றிலேகூடச் சில இடங்களிலே முத்துபோல வார்த்தைகள் அகப்படும். தொழிற் பெண்களின் பாட்டு மிகவும் ரஸமானது. சந்தமும் இன்பம்; ஒன்றுக்குப் பாதி நல்ல கவிதை.

பெண்களின் பாட்டில் செய்யவேண்டிய சீர்திருத்தங்களில் பெரும் பகுதி ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறேன். இதன் சம்பந்தமாக இங்கே இன்னும் சில வார்த்தைகள்

சேர்க்க விரும்புகிறேன். விட்டிலே பந்துக்களின் முன்பும், விவாக ஸந்தர்ப்பங்களிலும் பாடும்போது கூச்சத்தினாலே பாட்டை விடக்கூடாது. வித்தை விஷயத்தில் கூச்சங் காட்ட நியாயமில்லை. வித்தைப் பயிருக்த விடுதலை நீர் பாய்ச்ச வேண்டும். மேலும் பெண்களுக்குள்ளே பொதுக் கல்வியை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கவேண்டும். கல்வியறிவில்லாத மூடர் எந்தத் தொழிலும் நேரே செய்ய மாட்டார்கள். தவிரவும் பார்ஸி மெட்டிலே ஆரத்தி யெடுப்பது, இங்கிலீஷ் நலங்கு முதலிய கோரமான விகாரங்களுக்குத் துணை செய்யக்கூடாது. நமது நாடக சாலைக்குள்ளே 'கல்வியறிவும், சாஸ்திரப் பழக்கமும், நாகரீகமும் நுழையுங்காலம் வரை, நமது பெண்கள் நாடகப் பாட்டுக்களை கவனியாமல் இருப்பது நன்று. வேதாந்தக் கொடுமையையும் கொஞ்சம் குறைத்து விட்டால் பெரிய உபகாரம்.

குறிப்பு: முறையாக ஸங்கீதம் பயின்று பாடிவரும் பெண்மணிகளைப் பற்றி பாரதியார் இங்கே குறிப்பிட வில்லை; பொதுவாகக் குடும்பப் பெண்மணிகள் பாடுவதையே அவர் உள்ளத்தில் கொண்டு எழுதியுள்ளார் என்பது நன்கு கவனிக்கத் தக்கது.

இன்று சில மாது சிரோண்மணிகள் முறையாக இசைத் தேர்ச்சி பெற்று உலகப் புகழ் பெற்றுள்ளதையும், நமது இசையின் பெருமையை எல்லா நாடுகளிலும் நிலை நாட்டியுள்ளதையும் அனைவரும் அறிவார்கள்.

# 2

## அபிநயம்

**கூத்தில் அபிநயமே பிரதானம்**

தாள விஸ்தாரங்களைக் கூத்தன் தனது உடம்பிலே தோற்றுவிப்பதே கூத்தின் உடல். அபிநயமே கூத்தின் உயிர். தாளந் தவறாமல் ஆடிவிட்டால் அது கூத்தாகாது.

தற்காலத்தில் சில பாகவதர்கள் கதாகாலக்ஷேபங்களில் இடையே 'கொஞ்சம் கூத்தாடிக் காட்டுகிறார்கள். இதற்குச் சிலர், "பட்டணம் கிருஷ்ண பாகவதரின் வழி" என்று பெயர் சொல்லுகிறார்கள். 'இந்தக் கூத்து வெறுமே யதார்த்த நாட்டியமென்று பிறர் நினைக்க வேண்டும்' என்று உத்தேசித்தே அந்த பாகவதர்கள் அப்படிச் செய்கிறார்கள். ஆதலால், அதில் பலவித அபிநயம் பிடிக்கிறார்கள்.

பாகவதர் ஒருவர் வேதபுரத்தில் நந்தனார் சரித்திரம் நடத்தினார். நந்தன் அடிமை, ஐயர் ஆண்டை. ஐயருக்கு முன்னே நந்தன் போய் நிற்கிறான். "நைச்ய" பாவம் என்பது நைச்யத் தோற்றம். நைச்யம் என்பது நீசன் என்ற சொல்லடியாகத் தோன்றி நீசத்தன்மை என்று பொருள்படும் குணப்பெயர். இங்கு நீசன் என்பது அடிமை. எனவே நைச்ய பாவ மென்றால் அடிமைத் தோற்றம். இதை, அந்த பாகவ்தர் பல அபிநயங்களினாற் காட்டினார். நிரம்ப நேர்த்தியான வேலை செய்தார். புருவத்தை அசைக்

கிற மாதிரிகளும், கடைக்கண் காட்டுகிற மாதிரிகளும், தோளையும் வயிற்றையும் குலுக்குகிற மாதிரிகளும், மெல்ல மெல்ல பாகவதருடைய அபிநயங்கள் பக்தி ரஸத்திலிருந்து சிருங்கார ரஸத்தின் தோரணைகளுக்கு வந்து சேர்ந்தன. மேற்படி சிருங்காரத்தின் அபிநயங்களிலேயும் மேற்படி பாகவதர் குற்றமில்லை. புருவமும், கடைக்கண் முதலிய வற்றை மிகத் திறமையுடன் வெட்டுகிறார். சிருங்கார ரஸத்திற்கு, 'பாவம் ரதி; சந்திரன், சந்தனம் முதலியன உத்தீபனங்கள் அல்லது தூண்டுதல்கள்' என்றும் சாஸ்திரம் சொல்லுகிறது. மேற்படி பாகவதர் சந்திரன் முதலியவற் றைக் கண்ணாலே குறிப்பிடுகிறார்.

ஆனால் இவர் புருஷராக இருந்தும் புருஷாபிநயங்கள் குறைவாகவும், நாயிகாபிநயங்கள் அதிகமாகவும் கற்றிருக் கிற விந்தை குறிப்பிடத்தக்கது.

மேற்படி நைச்ய பாவத்திலே, அதாவது அடிமைத் தோற்றம் காட்டுவதிலேகூட, இவர் இந்தப் பெண்மை யைக் கலப்பதனால் அதிக மிசிரம் ஏற்படுகிறது. ஆண்டை யின் முன்னே வந்து நிற்கும் நந்தன் பறையன் பாதியும் தாஸி பாதியுமாகக் காட்டுகிறார்.

இருந்தாலும், பாகவதருடைய முகத்தில் காட்டும் அபிநயங்களைப் புகழ்ந்து சொல்லுதல் நம்முடைய கடமை. ஊடலை மாத்திரம் முகத்தில் தோன்றுமாற்றென்பது அபி நயங்களிற் காட்டுகிறார். இப்படி மற்ற வகுப்புக்களையும் சேர்த்தால் எத்தனைவித அபிநயங்களாகும்? நிறைய ஆகும் அல்லவா? கருணா ரஸத்தின் பாவம் சோகம் என்று சொல் லப்படும். இதைக் காட்டுவதில் மேற்படி பாகவதருக்குத் தோடாப் பண்ணிப்போடத் தகும். இன்னும் ஒன்று, கடைசி. அதிலேதான் அந்த பாகவதர் முதல்தரமான வேலை செய்கிறார். அதாவது, பயாநக ரஸத்தைப் பதின

யிரம் அபிநயங்களிற் காட்டுகிறார். இந்த ரஸத்திற்குப் பாவம் பயம். மானுக்கும், முயலுக்கும், சில மனுஷ்யருக்கும் இயற்கையாகவுள்ள பயத்தை இவர் அபிநயத்தில் பூதக்கண்ணாடி போலக் காட்டுகிறார். அந்த பாகவதர் சில தினங்களின் முன்பு என்னைப் பார்க்க வந்தார். "ஹாஸ்ய ரஸம், ரௌத்ர ரஸம், வீரரஸம், அற்புதம், சாந்தம் என்ற ஐந்து ரஸங்களையும் நீங்கள் தீண்டவேயில்லை. அதென்ன காரணம்?" என்று கேட்டேன். அந்த பாகவதர் சொல்லுகிறார்:—"நான் என்ன செய்வேன்? நான் நாட்டிய சாஸ்திரம் படித்தது கிடையாது. ஊரிலே கண்ட அபிநயங்களை நான் நடித்துக் காட்டுகிறேன். ஹிந்துக்களிலே அடிமைத்தனம் அதிகம். ஆதலால், எனக்கு "நைச்ய பாவம்," என்ற அடிமைத் தோற்றம் காட்டுதல் மிகவும் ஸுலபமாக வருகிறது. வீர ரஸம் காட்டச் சொன்னால் எப்படிக் காட்டுவேன்? நான் பிறந்தது முதலாக இன்றுவரை ஸஞ்சாரம் செய்து வந்திருக்கிற ஏழெட்டு ஜில்லாக்களில் ஒரு வீரனைக் கூடப் பார்த்ததில்லை. வீர ரஸத்திற்கு நான் எங்கே போவேன்?" என்று சொன்னார். அப்போது நான் "ரஸ பண்டாரம்" என்ற ஸம்ஸ்க்ருத சாஸ்திரத்திலிருந்து பின்வரும் பொருளுடைய சுலோகங்களை அவருக்குப் படித்துக் காட்டினேன். அந்த நூல் சொல்லுகிறது:—

"லோக நடையினாலே சாஸ்திரம் பிறக்கிறது. அந்த சாஸ்திரத்தை பயிற்சியினாலே விஸ்தாரப் படுத்துகிறார்கள். ரஸதிருஷ்டி ஏற்படுவதற்கு இயற்கையே மூலம், ரஸவான்களுடைய பழக்கத்தாலும் பக்தி வழிகளை அனுசரிப்பதனாலும் ஒருவன் ரஸக் காட்சியை வருவித்துக் கொள்ளலாம்.

"ராகத் துவேஷங்களை ஜயிப்பதனால் ஒருவன் சித்தி சமாதி யடைகிறான். அப்போது ஞானதிருஷ்டி யுண்டாகிறது. அந்த ஞானதிருஷ்டி யுடையவர்கள் புறப்பயிற்சி

யில்லாமல் சாஸ்திரங்களுக்குக் கண்ணுடிபோல் விளங்கு வார்கள்.

"சிங்கார ரஸத்தை ஒரு கூத்தன் காண்பிற்கும் அபிநயங் களில் கூத்துப் பெண்ணுடைய அபிநயங்கள் கலக்காலாது. ஆண் மகனே பெண்ணுருக்கொண்டு கூத்தாடுவானுயின், அப்போது பெண்மை அபிநயங்கள் காண்பிக்கத்தகும். ஆண்மகன் உருமாருமல் கூத்தாடும்போது பெண்மை தோன்றலாகாது.

"வீர ரஸத்தில் ஒருவன் தேர்ச்சியடைய விரும்புவானு யின், ராமன் முதலிய அவதார புருஷர்களுடைய வடிவை அவன் தியானம் செய்யக் கடவான். நாராயண உபா ஸனேயே கூத்தனுக்கு வீர ரஸத்தில் தேர்ச்சி கொடுக்கும்.

"பயாநக ரஸத்தை ஸபையிலே கூத்தன் அதிகமாக விவரிக்கலாகாது, எந்த நாட்டிலே கூத்தர் பயாநகத்தை யும் சோகத்தையும் அதிகமாகக் காட்டுகிருர்களோ, அந்த நாட்டில் பயமும் துயரமும் அதிகப்படும்.

"நைச்ய பாவம் அதிகமாகத் தோன்றும் கூத்திலைலே, ஒருநாட்டார் அடிமை இயற்கை மிகுதியாக உடையவர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஆதலால், கூத்தர் கூத்துகளில் அடிமைத்தோற்றத்தை மிதமிஞ்சிக் காட்டாத படி நாட்டார் கவனித்துக் கொள்ளவேண்டும்.

"நாட்டிய சாஸ்திரத்தை உண்மையாகப் பயின்ருல், அதிலிருந்து ஆண்களுக்கு ஆண்மையும், பெண்களுக்குப் பெண்மையும் உண்டாகும். அந்த நெறி தவறிப் பயிற்சி செய்தால் அதிலிருந்து ஆணுக்குப் பெண்மையும், பெண் ணுக்கு ஆண்மையும் விகாரமாகத் தோன்றும்.

"நாட்டிய சாஸ்திரத்தை ஆதியிற் பரமசிவன் நந்திக் குக் கற்றுக் கொடுத்தார். அப்போது, பகவான் நந்தியை நோக்கி, 'கேளாய், நந்தி! அபிநயம் தவறுவதாலே ஜனங்

கள் நரகத்தை அடைகிறார்கள். தர்மிஷ்டனாகிய கூத்தன் அபிநய உண்மைகளை ஆசார்யனிடமிருந்து நியமங்களுடனே கற்றுக்கொள்ள வேண்டும். அடிமைகள் கூத்துப் பழகினால் அபிநய தர்மங்களைச் சிறிதேனும் தெரிந்து கொள்ளாமல் எப்போதும் அடிமைக் கூத்தொன்றே ஆடிக் கொண்டிருப்பார்கள். அங்ஙனம் அடிமைகள் சாஸ்திர விரோதமாக நைச்யம் ஒன்றையே காட்டி நடத்தும் கூத்தைப் பார்ப்போர் நரகத்தை அடைகிறார்கள்' என்று சொல்லி, மேலும் சொல்லுகிறார்: 'தர்மிஷ்டனாகிய சிஷ்யன், நெறிப்படி ஆசார்யனிடமிருந்து கற்றுக்கொண்ட நாட்டியத்தில் நவரஸங்களும் ஸமரஸப்பட்டுக் காண்போருக்கு ஆனந்தத்தையும், லக்ஷ்மீ கடாக்ஷத்தையும் ஏற்படுத்தும். நல்ல ஆசார்யன் இல்லாமல் இந்த நாட்டிய சாஸ்திரத்தைப் பழகுவோன் உண்மையான பக்தியுடையவனாக இருக்கவேண்டும். தெய்வ பக்தியினாலே ஸகல வித்தைகளும் வசப்படும்.'

இங்ஙனம் மேற்படி ரஸபண்டாரமென்ற நூலிலிருந்து நான் பல சுலோகங்களை அவருக்குப் படித்துக் காட்டினேன்.

இதையெல்லாம் கேட்டவுடன் அந்த பாகவதர் மிகவும் சந்தோஷமடைந்தவராய், "இந்த சாஸ்திரத்தை என்னிடம் கொடுங்கள். நான் எழுதிக்கொண்டு இந்தப் பிரதியைக் கொடுத்து விடுகிறேன்" என்றார். "அப்படியே செய்யுங்கள்" என்று சொல்லி அந்தச் சுவடியை அவரிடம் கொடுத்தேன்.

அந்த சாஸ்திரத்தில், 'ரஸ ஞானத்திற்கு உபாஸனையே முக்ய ஸ்தானம்,' என்பது மிகவும் அழுத்திச் சொல்லப்படுகிறது. இதை அந்த பாகவதரிடம் எடுத்துக் காட்டினேன். அதன் பேரில், தாம் சில தினங்களின் முன்பு வேதநாயகர் கோயிலைப் பிரதக்ஷிணம் செய்து கொண்

டிருந்ததாகவும், அப்போது இந்த ஊர்க் குள்ளச்சாமி என்ற பரதேசி தம்மை இடையே நிறுத்தி, "ஓம் சக்தி" என்ற மஹாசக்தி மந்திரத்தைத் தமக்கு உபதேசம்செய்து விட்டுப் போனதாகவும், அதிலிருந்து தாம் பராசக்தி உபாஸனை செய்து வருவதாகவும் சொன்னார்.

நான் மிகவும் சந்தோஷத்துடன், அவரை வண்டி யேற்றி வழியனுப்பிவிட்டு வந்தேன். அவர் இன்னும் நம் முடைய புஸ்தகத்தை திரும்பக் கொடுத்தனுப்பவில்லை.

# 3

## தமிழ்நாட்டில் நாடகம்

"தமிழ் நாட்டில் நாடகப் பாட்டுக்கள் நாள்தோறும் நூற்றுக்கணக்காக அதிகப்பட்டு வருகின்றன. ஆனால் இவற்றிலே தெளிவு, அறிவு வளம், கல்விப் பயிற்சி, சொல் நயம், ரச ஒளி முதலிய லக்ஷணங்கள் கொஞ்சமேனும் காணப்படவில்லை வண்டிக்காரன் பாட்டு, பாம்புப் பிடாரன் பாட்டு முதலிய பாமரப் பாட்டுக்களிலே இலக்கணப் பிழைகள் இருந்தபோதிலும் கவிதா ரஸம் அமைந்திருப்பது காண்கிறோம். இந்த நாடகப் பாட்டுக்கள் வெறும் பாமரமாக இருப்பதுடன் கவிதா ருசி அணுக்கூடக் கலக்காமல் பெரிய பீடையாக ஏற்பட்டிருக்கின்றன. மேலும் தமிழ்ப் பாஷையின் இயல்புக்குப் பொருந்தாத மெட்டுகளில் நாடகக்காரருக்கு எப்படியோ பிரியம் உண்டாகி யிருக்கிறது. இதற்கெல்லாம் விமோசனம் என்ன?" என்று ஒரு தமிழ்க் கவிஞரிடம் கேள்வி போடப் பட்டது. அதற்கு அவர் சொல்லிய மறு மொழியை இங்கு எழுதுகிறேன்.

"இந்த விஷயத்தில் நாடகக்காரரைக் குற்றம் சொல்வது ஞாயமில்லை. பெரும்பாலும் நமது நாட்டில் ஏழை வாலிபர்கள் சங்கீதத்திலும், உல்லாசத்திலும் பிரிய முடையவர்களாக இருக்கும் பொழுது, ஜீவனத்துக்காகவும்

சில சமயங்களில் உல்லாசத்தின் பொருட்டாகவும் நாடகங்களிலே சேருகிறார்கள். இவர்களுக்கு ஏராளமான பாட்டு வேண்டியிருக்கிறது. பழைய மெட்டுக்களும் அர்த்தம் தெரியாத கடுஞ் சொற்களும் இவர்களுக்கு அவசியமில்லை. தமிழ்ப் புலவர்களிடம் போனால் நிகண்டுக்குக் கூட அர்த்தம் தட்டும்படியான வார்த்தைகள் எழுதிக் கொடுப்பார்கள். சாமான்ய பாஷையில் எழுதும் தொழில் புலவர்களுக்குத் தெரியாது. பெரும்பாலும் இவர்களுக்கு ஸங்கீதம் தெரியாது தீவிரமான தாள கதியும், மதுரமான இசையும் உடையனவாய் நடிகனுக்கு உதவக் கூடிய பாட்டுக்கள் நாடகக்காரருக்கு வேண்டும்.

"தவிரவும் தமிழ் ஸங்கீதம் பல வருஷங்களாகப் புதுமையும் உல்லாஸமும் இழந்து சோர்ந்து இருக்கிறபடியால், நாடகக்காரரும், நாடகம் பார்க்கப் போகும் பொது ஜனங்களும் ஹிந்துஸ்தானி, பார்ஸி மெட்டுகளையே விரும்புகிறார்கள். ஆகவே இப்படிப்பட்ட மெட்டுகளுக்குச் சரியான பதங்கள் சேர்த்துக் கொடுப்போர் எவ்வளவு மூடராக இருந்தாலும் இவர்களை நாடகக்காரர் ஆவலுடன் ஏற்றுக்கொள்ள நேருகிறது. கவிதா ரஸங்களைப் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தால், இன்றைக்கு நாடகம் நடக்க வேண்டுமே, இதற்கென்ன செய்வது? புதிய கவிதை புலவர்களிடம் தோன்ற வேண்டும். புதிய மெட்டுகள் தமிழ்நாட்டு சங்கீத வித்வான்கள் ஏற்படுத்த வேண்டும். அப்போது தமிழ் நெறிக்கு இசையாத பார்ஸி மெட்டுகளும், காதைத் தொளைக்கும் பாமரமான பதவரிசைகளும் நாடகத்தை விட்டு நீங்கும்.

# 4

## சங்கீத விஷயம்

பொதுப் பள்ளிக்கூடத்தில் சங்கீதம் கற்றுக் கொடுக்க வேண்டும். இது மற்ற நாகரிக தேசங்களில் சாதாரண மாக நடந்து வருகிறது. உயிரிலே பாதி ஸங்கீதம். சாஸ் திரத்தை யாருமே பேணுமலிருந்தால், பாடகர்கூட அதைக் கைவிட்டுவிடுவார்கள். ஆதலால் சுதேசமித்திரன் (விசேஷ அனுபந்தம்) பத்திரிகையில் ஸ்ரீமான் ஸ்ரீநிவாசய் யங்கார் ஸங்கீதம் சீர்திருந்த வேண்டுமென்ற கருத்துடன் எழுதிய லிகிதத்தைப் படித்தபோது எனக்குச் சந்தோஷ முண்டாயிற்று.

இங்கிலீஷ் பாஷையிலே ஒரு பெரிய கவிராயன் ஸங்கீத ஞானமில்லாதவரைக் கள்ளரென்றும் குறும்ப ரென்றும் சொல்லிப் பழிக்கிறுன். பாட்டு ஸகலருக்கும் நல்லது. தொண்டையும் எல்லோருக்கும் நல்ல தொண்டைதானென்பது என் மதம். கூச்சத்தாலும் பழக்கக் குறைவாலும் பலர் தமக்கு நல்ல குரல் கிடையா தென்று வீணே நினைத்துக் கொள்கிறுர்கள்.

பாட்டுக் கற்க விரும்புவோர் காலையில் சூரியனுக்கு முந்தியே எழுந்து பச்சைத் தண்ணீரிலே குளித்துவிட்டுக் கூடியவரை சுருதியும் லயமும் தவருதபடி ஸரளி வரிசை முதலியன பழக வேண்டும்.

உச்சஸ்தாயிதான் எப்போதும் நல்லது. உடம்பை நிமிர்த்தி முகத்தை நேரே நிறுத்தி முகத்திலும் வாயிலும் கோணல் திருகலில்லாதபடி வாயை ஆவென்று சிங்கம் போலே திறந்து பாடவேண்டும். தொண்டையிலே கரகரப்பிருந்தால் வெறும் மிளகைத் தின்ன வேண்டும். கற்கண்டு சேர்ப்பது நல்லதில்லை.

பாட்டுக் கச்சேரி நடத்தும்போது, நடுவிலே மற்ற வாத்தியக்காரரை வாசிக்கச் சொல்லிவிட்டுப் பாடகர் வெறுமே இருப்பதும், தெம்மாங்கு முதலான வேடிக்கைப் பாட்டுகள் பாடுவதும் தமக்கு ரஸப்படவில்லையென்று ஸ்ரீநிவாசய்யங்கார் சொல்லுகிறார். அதை நான் ஒரு பகுதி ஆக்ஷேபிக்கிறேன். வீணை, குழல் முதலிய இசைக் கருவிகளும் மத்தளம் முதலிய தாளக் கருவிகளும் வாய்ப் பாட்டின் உதவியில்லாமல் தனியே இன்பந்தருகின்றன.

வாத்யம் எட்டாத ஸ்வரத்தைத் தொடப் போய்க் கஷ்டப்படாது. தொண்டையிலே கரகரப்பும், அடைப்பும் இருக்கும்போது கச்சேரி நடத்த வராது. சரியானபடி சுருதி சேர்ந்த பிறகுதான் தொழில் செய்யத் தொடங்கும்.

வீணையும் குழலும் பறையும் வாய்ப்பாட்டில்லாமல் தனியே ஒலிப்பது பழைய நாளிலும் உண்டு.

கண்ணன் குழலுக்கு இடைப்பெண் ஒத்துப்பாடியது முண்டு. எம்பெருமான் தனியே இசைப்பதுமுண்டு. தெம்மாங்கு முதலியன ஹாஸ்ய ரசத்தை உடையவை. அவற்றை முழுதும் நிறுத்திவிடக் கூடாது ஆனல் ஒரே மெட்டை வளைத்து வளைத்துப் போன இடமெல்லாம் சொல்லிப் பயனில்லை. தமிழ் பிழையாகவும் பொருள் ரஸமில்லாமலும் பாட்டுக்கள் இருந்தால் அவற்றை மன்றிலே கொண்டு வருதல் நியாயமில்லை.

இருந்தாலும் மத்தளக்காரனுக்குப் பாட்டுக்காரன் பயந்து கட்டுப்பட்டு நடக்கும் விபரீதம் சில இடங்களிலே காணப்படுவதைக் கண்டனை செய்து ஸ்ரீநிவாஸய்யங்காரி சொல்லும் வார்த்தை ஒப்புக்கொள்ளத் தக்கது.

ஏனென்றால் பாட்டுக்காரன் தனது பாட்டுக்களுக்குத் தவறாமல் தாளம் போட்டு வரவேண்டும். இவ்வளவு தாள ஞானம் இருந்தால் பாடகனுக்குப் போதும் அதிகமிருந் தால் மிச்சம். இந்த விஷயந் தெரியாமல் மத்தளக்கார னுக்குப் பாட்டுக்காரன் பயப்படுவது மிகவும் வேடிக்கை.

ஸ்ரீமான் ஸ்ரீநிவாசய்யங்கார் ராகப் பழக்கம், வர்ணங்கள், கீர்த்தனங்கள் முதலிய விஷயங்களைப் பற்றி எழுதியிருப்பதெல்லாம் (பெரும்பகுதி) கேட்டவுடன் நியாயமென்று கொள்ளத்தக்கது. கீர்த்தனங்கள் பழகுவது மாத்திரம் அவரவரிஷ்டப்படி போக வேண்டும். எது எப்படியாயினும் யாராவதொரு வித்வான் இந்தத் தமிழ் நாட்டுக்குப் புதிய கீர்த்தனங்கள் ஏற்படுத்தும் வழிகாட்டிக் கொடுத்தால், ஆயிரம் பேர் அதைப் பின் பற்றி மேன்மை பெறுவார்கள்.

குறிப்பு: இக்கட்டுரை 1916 டிசம்பர் 19 இல் எழுதப் பெற்றது. பாட்டு என்ற கட்டுரைகளோடு சேர்ந்ததன்று.

# 5

## ஐரோப்பிய ஸங்கீதம் ஹிந்து ஸங்கீதம்

ஐரோப்பிய ஸங்கீதம், ஹிந்து ஸங்கீதம் இரண்டையும் பற்றித் தமது கொள்கைகளை வங்கத்துப் புலவராகிய ஸ்ரீ ரவீந்திரநாத் தாகூர் தமது சரித்திரக் குறிப்புகளிலே எழுதியிருக்கிறார். இவர் இளவயதிலேயே பல வருஷம் இங்கிலாந்தில் வாஸம் செய்தவர்; குழந்தை முதலாகவே நல்ல ரஸிகர். இவருடைய வார்த்தைகள் மதிப்புக்குரியன.

ரவீந்திரநாதர் சொல்லுகிறார்:—

"குரலைப் பழக்குவதில் நமது தேசத்துப் பாட்டுக்காரரைக் காட்டிலும் மேற்கு நாட்டுப் பாடகர் மிகவும் சிறப்புடையோர். அவர்களுக்குத் தொண்டை வசப்பட்டிருப்பது போலே, இங்கு இல்லை. நம்மவர்களிலே உயர்ந்த பாட்டுக்காரர் பாடும்போதுகூட 'இவர்கள் சிரமப்படுகிறார்கள்' என்ற விஷயம் வெளியே தெரிந்து விடுகிறது. யாதொரு சிரமமும் காட்டாதபடி மழை பெய்வதுபோலே இயற்கையாகப் பாடும்படி நம்மவர் சாரீரத்தைப் பழக்கவில்லை. சில சமயங்களில் மேல் ஸ்தாயியிலும் தமக்கு எட்டாத ஸ்வரங்களைத் தொட முயற்சி செய்கிறார்கள். ஐரோப்பாவில் பாட்டுக்கு வெளியேறுவோரின் தொண்டை, வல்லவன் வாசிக்கும் வாத்தியம்போலே, ஒரு குற்றம், ஒரு அபசப்தம், ஒரு கரகரப்பு, ஒரு பிழை இல்லாமல் இருக்கவேண்டும்.

இவ்வாறு தொண்டையைப் பயிற்சி செய்யாதோர் அங்கே பாடுவதாக வெளிப்பட மாட்டார்கள்.

"நம்மவர்கள், பாட்டுக் கச்சேரி வந்தால், சபைக்கு வந்த பிறகுதான் தம்பூர் சேர்ப்பதும் மிருதங்கத்தைத் தட்டித்தட்டி ஒத்திட்டுப் பார்ப்பதும் ஏதெல்லாமோ ஒரு மணி நேரத்து வேலை செய்கிறார்கள். இந்த நீண்ட ஹிம்ஸையை சபையோர் சும்மா பொறுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஐரோப்பாவிலே அப்படியில்லை. கருவிகளையெல்லாம் சபைக்கு வருமுன்பாகவே நேர்படுத்தி வைத்துக் கொண்டு சபைக்கு வந்த உடனே பாட்டுத் தொடங்குகிறார்கள்.

"நம்மவர்கள் வர்ணமெட்டு சரியா என்பதையே பிரதானமாகப் பார்க்கிறார்கள். அங்குள்ளோர் குரலையே முதலாக வைத்துக் கொண்டு ஆச்சரியமான வேலை செய்கிறார்கள்.

இன்பங்களை நேரே வகுத்தால் ஒவ்வொருவனுக்கும் இன்பம் உண்டாகிறது.

நேரே வகுத்தல் என்றால் ஒன்றுபோல் வகுத்தல் என்று அர்த்தமில்லை. நியாயமாக வகுத்தல் என்று அர்த்தம். நியாயமே ஸமத்வத்தின் பெயர். நியாயமே முதலாவது ஸமத்வம்.

மேலேகூறிய ஜன வலிமை, ஸர்வஸாகம், என்ற இரண்டும் சேர்ந்தால் ஜனச் செம்மை ஏற்படுகிறது.

ஜனச் செம்மை எப்படியிருக்கும்?

மனிதன் செல்வவானாவான். குடிகள் விடுதலை பெற்றிருப்பர். நாடு உயர்வு பெற்றிருக்கும்.

"எனக்கு ஐரோப்பிய ஸங்கீதம் ரஸப்படவில்லை; நன்றாகத்தானிருக்கிறது; ஆனால், "ஸர்க்கஸ்" வேடிக்கை எப்படி ஒழுங்காகவும் நன்றாகவுமிருக்கிறதோ அதே மாதிரி. ஒரு பெரிய பாட்டுக்காரி இங்கிலாந்தில் கச்சேரி நடத்தும் போது நான் கேட்கப் போனேன். பாடிக்கொண்டு வரும் போதே பக்ஷிகள் கத்தும் ஒலிகளைக் காட்டத் தொடங்கினாள். எனக்கு சிரிப்புப் பொறுக்க முடியவில்லை. பெருங் கேலியாக இருந்தது. ஆண் பாட்டு இத்தனை மோசமில்லை.

"நெடுநாள் பழக்கத்தினால் இப்போது எனக்கு ஐரோப்பிய ஸங்கீதத்தின் பொருள் விளங்கத்தான் செய்கிறது. ஆனால் நம்முடைய ஸங்கீதத்தின் வழி வேறு, அவர்கள் வழி வேறு. அது ஜடம்; நம்முடையது ஸூக்ஷ்மம் அது லௌகிகம்; நமது பாரமார்த்திகம். அந்த ஸங்கீதத்திலே மானுஷிக சக்தி அதிகமிருக்கிறது; நமது ஸங்கீதத்திலே தெய்வசக்தி விளங்குகிறது."

மேலே ரவீந்திரர் வார்த்தைகளை அப்படியே மொழி பெயர்க்கவில்லை. ஸாராம்ஸத்தை எனது பாஷையில் எழுதியிருக்கிறேன். 'நம்முடைய ஸங்கீத சாஸ்திரம் ஐரோப்பிய சாஸ்திரத்தைவிட மேலானது' என்று ரவீந்திரர் சொல்லும் வார்த்தை முழுவதும் உண்மையென்பது இரண்டு முறைகளிலும் பழக்கமுடைய பண்டித ரெல்லாருக்கும் தெரிந்த விஷயமேயாம் ஆனாலும், நமது தேசத்து வித்வான்கள் கண்டப் பயிற்சி, ஸபா நாகரிகம் என்ற அம்சங்களில் ஐரோப்பியருக்கு ஸமானமாகும்படி முயற்சி செய்தால் நல்லது. ஜனங்களுக்கு இன்பம் அதிகப்படும்; பாடுவோருக்குப் பணம் அதிகப்படும்.

குறிப்பு: இப்பகுதி மாலை என்ற பகுதியில் (பகுதி. 2) "ஆணி முத்தைப் போலே அறிவு முத்து மாலையினாள்" என்பதில் உள்ளது இக்கட்டுரை 1716 அக்டோபர் 16 இல் எழுதியது.

# 6

## பிற்சேர்க்கை

(பாரதியார் பாட்டைப் பற்றி எங்கெல்லாம் சொல்லி யிருக்கிறரோ அவற்றின் தொகுப்பு.)

1. பாட்டைத் திறப்பது பண்ணலே—இன்ப
   வீட்டைத் திறப்பது பெண்ணலே

அம்மாக்கண்ணு பாட்டு

2. வைகறை யாகுமுன் பாடி விழிப்புற்று
   விட்டு விடுதலையாகி நிற்பாயிந்தச்
   சிட்டுக் குருவியைப் போலே

விடுதலை -சிட்டுக்குருவி

3. கேட்கப் பாட்டும் காண நல்லுலகமும்
   களித்துறை செய்யக் கணபதி பெயரும்
   என்றுமிங் குளவாம்! சலித்திடாய்; ஏழை
   நெஞ்சே! வாழி! நேர்மையுடன் வாழி

விநாயகர் நான்மணிமாலை பா. 24

4. பாம்பை அடிக்கும் படையே சக்தி
   பாட்டினில் வந்த களியே சக்தி

தோத்திரப்பாடல்கள்—சக்தி

5. பறவை யேது மொன்றுள்ளதுவோ?—இங்ஙன்
பாடுமோ அமுதக் கனற் பாட்டு
தோத்திரப் பாடல்கள்—வேய்ங்குழல்

6. நாத வார்கடல் இன்னொலியோடு
நற்றமிழ்ச் சொல் இசையையும் சேர்ப்பேன்
தோத்திரப் பாடல்கள்—சூரிய தரிசனம்

7. பண்ணில் இனிய பாடலோடு பாயுமொளியெலாம்
பாரில் எம்மை உரிமை கொண்டு பற்றி நிற்கவே
வேண்டுமடிஎப் போதும்விடுதலை,அம்மா!
ஞானப்பாடல்கள்—விடுதலை வேண்டும்

8. மாதரோடு மயங்கிக் களித்தும்
மதுர நல்லிசை பாடிக் குதித்தும்
தனிப்பாடல்கள்—மது

9. வேத மந்திர நாதம் ஓர்பால்
வேயினின் குழல் மெல்லொலி ஓர்பால்
தனிப்பாடல்—மது

10. புள்ளாங் குழல் கொண்டு வருவான்—அமுது
பொங்கித் ததும்புநற் கீதம் படிப்பான்,
கள்ளால் மயங்குவது போலே—அதைக்
கண்மூடி வாய்திறந்தே கேட்டிருப்போம்.
கண்ணன் பாட்டு—கண்ணன் என் விளையாட்டுப் பிள்ளை

11. பண்ணொன்று வேய்ங்குழலில் ஊதி வந்திட்டான்
—அதைப்
பற்றி மறக்குதில்லை பஞ்சை உள்ளமே
கண்ணன் பாட்டு—கண்ணன் என் காதலன்

பாட்டும் சுதியுமொன்று கலந்திடுங்கால்—தம்முள்
பன்னி உபசரணை பேசுவதுண்டோ?

கண்ணன் பாட்டு—கண்ணம்மா என் காதலி

13. நாதம் நாதம் நாதம்
நாதத் தேயோர் நலிவுண்டாயின்
சேதம் சேதம் சேதம்
தாளம் தாளம் தாளம்
தாளத்திற்கோர் தடையுண்டாயின்
கூளம் கூளம் கூளம்
பண்ணே பண்ணே பண்ணே
பண்ணிற் கேயோர் பழுதுண்டாயின்
மண்ணே மண்ணே மண்ணே
குழலே குழலே குழலே
குழலிற் கிறல் கூடுங்காலே
விழலே விழலே விழலே

குயில் பாட்டு

14. கற்றவர்க்குச் சொல்வேன் கவிதைக் கனிபிழிந்த
சாற்றினிலே, பண் கூத்தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி அதனோடே இன்னமுதைத் தான்கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதிவளின் மேனி வகுத்தான் பிரமனென்பேன்

குயில் பாட்டு

15. தேவத் திருமகளிர்—இன்பந்
தேக்கிடும் தேனிசைகள்

தீ வளர்த்திடுவோம்

16. பாட்டுக் கலந்திடவே—அங்கேயொரு
பத்தினிப் பெண் வேண்டும்

காணி நிலம் வேண்டும்

17. மண்ணுலகத்து நல்லோசைகள் காற்றெனும்
வானவன் கொண்டு வந்தான்
பண்ணி லிசைத்தவ் வொலிகள் அனைத்தையும்
பாடி மகிழ்ந்திடுவோம்
நிலாவும் வான்மீனும் காற்றும்

18. பாம்புப் பிடாரன் குழலூதுகின்றான்
"இனிய இசை சோகமுடையது" என்பது
கேட்டுள்ளோம்.

ஆனால் இப்பிடாரன் ஒலிக்கும் இசை
மிகவும் இனியதாயினும் சோக ரஸந் தவிர்ந்தது.
இஃதோர் பண்டிதன் தர்க்கிப்பது போலிருக்கிறது.
ஒரு நாவலன் பொருள் நிறைந்த சிறிய சிறிய
வாக்கியங்களை அடுககிக் கொண்டு போவது
போலிருக்கிறது.

19. பாம்புப் பிடாரன் குழலூதுகின்றான்.
குழலிலே இசை பிறந்ததா? தொளையிலே பிறந்ததா?
பாம்புப் பிடாரன் மூச்சிலே பிறந்ததா?
அவனுள்ளத்திலே பிறந்தது; குழலிலே
வெளிப்பட்டது.

உள்ளம் தனியே ஒலிக்காது: குழல் தனியே இசை
புரியாது.

உள்ளம் குழலிலே ஒட்டாது.
உள்ளம் மூச்சிலே ஒட்டும். மூச்சு குழலிலே ஒட்டும்.
குழல் பாடும்.

இஃது சக்தியின் லீலை.
அவள் உள்ளத்திலே பாடுகிறாள். அது குழலின்
தொளையிலே கேட்கிறது.
பொருந்தாத பொருள்களைப் பொருத்திவைத்து
அதிலே இசையுண்டாக்குதல்—சக்தி
வசன கவிதை—சக்தி

20. பாட்டைக் காட்டிலும் ரஸமான தொழில் வேறில்லை.

வசன கவிதை–ஜகத்சித்திரம்

21. நட்பு, கல்வி, ஸங்கீதம் முதலிய கலைகள்
எக்காலமும் தெவிட்டாதவை

சந்திரிகையின் கதை

22. The young Man's tune–Bhairava – Hundustani தோடி. Majority of love songs in N. India are in that Tune.

The meaning of that raga–Love and Despair· Despair reaches its depth in the பிரதிமத்யமம். I must compose a song in Bhairava in praise of that Raga.

Stray Thoughts–சில சங்கற்பங்கள்.

23. Formalisation in Art, in Grammar, Sruthis, in Litera–ture. Is it possible in music?
Stray Thoughts–சில சங்கற்பங்கள்.

24. ஒளியிலும் ஒலியிலும் ஸ்தாயிகள். ஸ்வர ஸம்பந்தங்கள். புலன்களின் வரம்பு நிலை.
ப்ரதிபா வரம்பற்றது.
ப்ரதிபா ஆத்மாவின் விழி

Stray Thoughts–சில சங்கற்பங்கள்.

25. சிட்டுக்குருவிக்கில்லாத பெருமைகள் எனக்கும் சில அருள் செய்திருக்கிறாய் என்பது மெய்தான். ஆராய்ச்சி, பக்தி, சங்கீதம் முதலிய இன்பங்கள் மனிதனுக்குக் கைகூடும்; குருவிக்கு இயல்பில்லை.

சிட்டுக்குருவி என்ற கட்டுரையில்

**26.** பாட்டும் செய்யுளும் கோத்திடுவீரே
பரத நாட்டியக் கூத்திடுவீரே

தொழில்

**27.** ஸங்கீதத்திலே ஸ்வர ஸ்தானங்கள் ஸ,ரி,க,ம,ப, த, நி—என ஏழு இருக்கின்றன. ஆனால் நாம் எந்த ஒலியையும் 'ஸ' (ஸட்ஜம்) என்று வைத்துக் கொண்டு அதற்குத் தக்கபடி மற்ற—ரி, க, ம, ப, த, நி —பாடலாம்.

நாம் பாடும்போதே கீழே சில ஸ்வரங்கள் எட்டாது போனால் சுருதியை மாற்றிக் கொள்ளுகிறோம், அதாவது-திருஷ்டாந்தமாக-முன்பு "க" (காந்தாரம்) அல்லது "ம" (மத்யமம்) சொன்ன இடத்தை இப்போது "ஸ" (ஸட்ஜம்) என்று வைத்துக்கொண்டு அதற்கு மேல் அவ்வோசைக்குத் தக்கபடி ரி, க, ம, ப, த, நி, ஏற்றிக்கொண்டு போகிறோம். எப்படி நாம் சொன்னபோதிலும் ஸாதாரண மனிதனுடைய தொண்டையளவு இரண்டரை ஸ்தாயிதான். ஒரு ஸ, ரி, க, ம, ப, த, நி, மேல் ஸ்தாயி, அதற்கு மேலே ஸ, ரி, க, ம, ப, த, நி, மேல் ஸ்தாயி. எடுப்புக்குக் கீழேயுள்ளது கீழ் ஸ்தாயி.

இங்ஙனம் ஸாதாரண மனிதனுடைய தொண்டைக்கு இரண்டரை ஸ்தாயிதான் எட்டும். சிலருக்கு மூன்று ஸ்தாயியும், சிலருக்கு இன்னும் அதிகமாகவும் எட்டக்கூடுமென்று சொல்லுகிறார்கள். இருந்தாலும் மூன்றரை ஸ்தாயிக்கு மேலே பேசுதல் ஸாத்தியமில்லை.

ஆனால் ஒலியுலகத்தில் அநந்த ஸ்தாயிகள் இருக்கின்றன.

ஒலியுலகத்து ஸ்தாயிகள் அநந்தமாயினும் மனிதனுடைய தொண்டைக்கு இரண்டரை ஸ்தாயிகள் மாத்திரமே எட்டுவது போல, அவனுடைய செவிப்புலனுக்கும்

ஏழு ஸ்தாயிகள்தான் அகப்படுமென்று ஜகதீச சந்திர வஸு கணக்குச் சொல்லியதாக ஞாபகமிருக்கிறது.

சைதந்யமாகி எல்லையற்ற கடலில் நமக்குத் தென்படும் ஓரிரண்டு ஸ்தாயிகளிலுங்கூட நாம் ஆரோஹண அவரோஹண கிரமங்களிலும், ஸ்வரக் கோவைகளிலும் ராக வேற்றுமைகளிலும் எண்ணிறந்த விசித்திர விசித்திரமான அனுபவங்கள் பெறுதல் ஸாத்யமேயாகும். அதுதான் இந்த ஜகத்தில் மஹத்தான ஆச்சர்யம்.

நம்முடைய வரையறுக்கப்பட்ட புலனுணர்வுக்குள்ளே அநந்தங்கள் பல இருக்கின்றன. ஸ்வரங்கள் ஏழுதானே? அப்படியிருந்தும் அவற்றின் கலப்புக்களால் இந்த பூமண்டலத்தின் மீது இதுவரை ஏற்பட்டனவும் இப்போது ஏற்பட்டுவருவனவும் இனி ஏற்படப் போவனவுமாகிய ராக பேதங்களே எண்ணில்லாதன.

பதஞ்சலி யோக ஸூத்திரங்கள்



# பிற் சேர்க்கை

## 2

"பாட்டு ஸகலருக்கும் நல்லது. தொண்டையும் எல்லாருக்கும் நல்ல தொண்டை தானென்பது என் மதம். கூச்சத்தாலும் பழக்கக் குறைவாலும் பலர் தமக்கு நல்ல குரல் கிடையாதென்று வீணே நினைத்துக் கொள்கிறார்கள்.

"பாட்டுக்கற்க விரும்புவோர் காலையில் சூரியனுக்கு முந்தியே எழுந்து பச்சைத் தண்ணீரிலே குளித்து விட்டுக் கூடியவரை சுருதியும் லயமும் தவறாதபடி ஸரளி வரிசை முதலியன பழக வேண்டும். உச்ச ஸ்தாயிதான் எப்போதும் நல்லது. உடம்பை நிமிர்த்து முகத்தை நேரே நிறுத்தி முகத்திலும் வாயிலும் கோணல் திருகலில்லாதபடி வாயை ஆவென்று சிங்கம் போலே திறந்து பாடவேண்டும்."

குரலைச் சரியான படி பழக்கினால் எல்லாருக்கும் பாட வரும் என்பது பாரதியாருடைய கொள்கை. எப்படிக் குரலைப் பழக்க வேண்டுமென்று அவர் சில நல்ல வழிகளை மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

பாரதியார் நவரஸங்களும் ததும்பும் படியாகப் பாட்டின் உணர்ச்சிக்கு ஏற்றவாறு பாடுவார். அவருடைய பாடலைக் கேட்க வேண்டும் என்பதற்காகவே மக்கள் திரளாக வருவார்கள்.

சிறந்த சொற்பொழிவாளரான திரு. சத்தியமூர்த்தி ஒரு கூட்டத்தில் பேசி விட்டு 'நீங்கள் வழக்கமாகக் கேட்கும் பாரதி நாளைக்குப் பேசுவார். இன்று இத்துடன்

கூட்டம் முடிவு பெற்றது' என்று அறிவித்து விட்டுப் போய் விட்டார். ஆனால் கூட்டம் கலையவில்லை.

பாரதியார் எழுந்தார். கரகோஷங்களுக்கு இடையே பாரதியார் பிரசங்கமாரி பொழிந்தார்'

'பாரத சமுதாயம் வாழ்கவே' என்ற அற்புதப் பாடலைப் பாடினார். கூட்டம் பதினொரு மணி வரையில் கலையாமல் இருந்ததற்கு வேறு காரணமும் வேண்டுமா? இவ்வாறு வ. ரா. அவர்கள் தமது மகாகவி பாரதியார் என்ற சுவையான நூலில் குறிப்பிடுகிறார். (இப்பாடலை பாரதியார் புதுச் சேரியில் இருந்தபோதே இயற்றினார்.)

வ. ரா. மேலும் தமது நூலில் கூறுகிறார்: தம்முடைய பாடல்களை, ஆண் பெண் அடங்கலும் தமிழ் நாட்டில் பாட வேண்டும் என்பது பாரதியாரின் ஆசை. ராகம் தாளம் எல்லாம் தெளிவாக இருக்க வேண்டும் என்று புரொபஸர் சுப்பிரமணிய அய்யரின் தம்பி சாமிநாத னுடைய உதவியைக் கொண்டு அவற்றை அழகாகச் சீர் படுத்தி விட்டார். பாரதியார் ஒரு பாடலை ஒரு ராகத்தில் பாடியிருப்பார். ஆனால் இந்த ராகத்தில் இன்ன தாளத் தில் அதைப் பாடினால், எழுச்சியுடன், எடுப்பாகவும் இருக்கும் என்று தம்பி சொன்னால், அதைத் தட்டவே மாட்டார். ஆப்தர்கள் நிபுணர்களாயிருந்தால், அவர் களுடைய யோசனையை பாரதியார் நிராகரிக்கவே மாட்டார்; அட்டியில்லாமல் அதை அப்படியே ஏற்றுக் கொள்வார்.

இவ்வாறு அவரோடு நெடுநாள் பழகியிருந்த வ. ரா. கூறுகிறார்.

பாரதியார் ஒரு புதிய பாடலை இயற்றினால் அதை மற்றவர்களுக்கு அதன் உணர்ச்சியோடு பாடிக்காட்டுவார்.

மண்டயம் குடும்பத்தார்தான் தம் கைப் பணத்தைச் செலவிட்டு 'இந்தியா' என்ற வார இதழை பாரதியார் நடத்துவதற்கு உதவினார்கள் பின்னால் இப் பத்திரிகையைப் புதுச்சேரியிலிருந்து நடத்த நேர்ந்த போது மண்டயம் ஸ்ரீ. ஸ்ரீநிவாசாசார்ரியார் தாமாகவே குடும்பத்தோடு புதுச்சேரி வாழ்க்கையை மேற்கொண்டார். இவருடைய தியாகத்தைத் தமிழர்கள் சரியாகப் புரிந்து போற்றவில்லை என்பது வருந்தத்தக்கது.

இவருடைய மகள் யதுகிரி அம்மாள் திருமணத்தின் போது முதல் நாளில் பாரதியார் தமது தேசியப் பாடல் கச்சேரி ஒன்று நிகழ்த்தினராம்.

பாரதியார் பாடல்களில் அநேகம் இசையோடு பாடுவதற்கு ஏற்றவை. இவர் இயற்றிய கண்ணன் பாட்டு பெரும்பாலும் இசையுடன் பிறந்தவை. இவற்றைப் பற்றி திரு. வ. வெ. சு. ஐயர் எழுதியுள்ள தாவது; "கவிதா ரீதியாகப் பார்க்கும் போது, இக் கீர்த்தனங்களுள் பெரும் பாலானவையிலுள்ள சுவை தேனினும் இனிதாயிருக்கிறது...... கடற்கரையில் சாந்தி மயமான சாயங்கால வேளையில், உலகனைத்தையும் மோஹவயப் படுத்தி, நீலக் கடலையும் பாற் கடலாக்கும் நில வொளியில், புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களைக் கற்பனா கர்வத்தோடும், சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரியன் தன்னுடைய கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட ஒவ்வொருவரும் இந்நூலிலுள்ள பாட்டுக்களை மாணிக்கங்களாக மதிப்பர்."

பாரதியார் நந்தன் சரித்திரக் கீர்த்தனைகளில் உள்ள பாடல்கள் சிலவற்றின் மெட்டைத்தழுவிச் சில அழகிய தேசியப்பாடல்கள் பாடியுள்ளார். தாயுமானவர் ஆநந்தக் களிப்பு, நொண்டிச்சிந்து இவற்றையும் புதிய முறையில்

கையாண்டுள்ளார். தங்கப் பாட்டு, நாட்டுப்புறப் பாடல் கள், பள்ளு. கிளிக்கண்ணி முதலியவற்றில் பாரதியாருக்கு விருப்பம் அதிகம். அவற்றைத் தழுவியும் சில பாடல்கள் செய்துள்ளார். பாடல்கள் எளிமையாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே இவற்றைக் கையாண்டுள்ளார்.

வகைக்கு ஒன்று அல்லது இரண்டாகச் சில பாடல்களை இங்கு சேர்த்துள்ளேன்.

இவையல்லாத பல பாடல்களும் அவற்றின் இசையும் பாரதியாரின் சொந்தப் படைப்பேயாகும்.

பாரதியார் மழையைப்பற்றி ஒரு பாடல் இயற்றி யுள்ளார். அதைப்படிக்கும் போது மின்னல் வெட்டுவதை யும், மழை கொட்டுவதையும், இடி இடிப்பதையும் கேட்பது போன்ற பிரமை தட்டுகிறது. இதே போல ஊழிக்கூத்து என்ற பாடலும் அற்புதமாக அமைந் துள்ளது.

பாரதியாருடைய பாடல்கள் பலவற்றை இசையுலகில் புகழ்வாய்ந்த வித்வான்கள் பலர் பாடியுள்ளனர்; இன்றும் பாடுகின்றனர். அவர்கள் பாடியதால் அவர்களுக்கும் புகழ் ஏறியது; பாடல்களும் புகழ் பெற்றன. அவற்றில் எல்லா வற்றையும் இங்கு சேர்ப்பது சாத்தியமில்லை. ஆறு பாடல் களை மட்டும் அவற்றைப் பாடியோரின் பெயரோடு இங்கு இணைத்துள்ளேன். குறிப்பாகக் கூறவேண்டுமானால் சங்கீத கலாநிதி மதுரை மணி ஐயருக்குப் பிறகு பல பாடல்களைப் பாடி வருகின்றவர்கள் சங்கீத கலாநிதி திருமதி டி. கே. பட்டம்மாள் அவர்களும், சங்கீதகலாநிதி திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுமாவர். பல ரிகார்டுகளும் கொடுத்துள்ளனர்.

# 1. முருகன் பாட்டு

**பல்லவி**

*முருகா! — முருகா! — முருகா!*

**சரணங்கள்**

1. வருவாய் மயில் மீதினிலே
   வடிவே லுடனே வருவாய்!
   தருவாய் நலமும் தகவும் புகழும்
   தவமும் திறமும் தனமும் கனமும் (முருகா)
2. அடியார் பலரிங் குளரே;
   அவரை விடுவித் தருள்வாய்!
   முடியா மறையின் முடிவே! அசுரர்
   முடிவே கருதும் வடிவே லவனே (முருகா)
3. சுருதிப் பொருளே, வருக
   துணிவே, கனலே, வருக!
   கருதிக் கருதிக் கவலைப் படுவார்
   கவலைக் கடலைக் கடியும் வடிவேல் (முருகா)
4. அமரா வதிவாழ் வுறவே
   அருள்வாய்! சரணம், சரணம்!
   குமரா பிணியா வையுமே சிதறக்
   குமுறும் சுடர்வே லவனே, சரணம்! (முருகா)
5. அறிவா கியகோ யிலிலே
   அருளா கியதாய் மடிமேல்
   பொறிவே லுடனே வளர்வாய்! அடியார்
   புதுவாழ் வுறவே புவிமீ தருள்வாய்! (முருகா)
6. குருவே! பரமன் மகனே!
   குகையில் வளருங் கனலே!
   தருவாய் தொழிலும் பயனும் அமரர்
   சமரா திபனே! சரணம் சரணம்! (முருகா)

## 2. மூன்று காதல்

### முதலாவது—சரஸ்வதி காதல்

பிள்ளைப் பிராயத்திலே—அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட் டேனங்கு
பள்ளிப் படிப்பினிலே—மதி
பற்றிடவில்லை யெனிலுந் தனிப்பட
வெள்ளை மலரணைமேல்—அவள்
வீணையுங் கையும் விரிந்த முகமலர்
விள்ளும் பொருளமுதம்—கண்டேன்
வெள்ளை மனது பறிகொடுத் தேன். அம்மா! 1

ஆடிவரு கையிலே—அவள்
அங்கொரு வீதி முனையில் நிற்பாள், கையில்
ஏடு தரித்திருப்பாள்—அதில்
இங்கித மாகப் பதம்படிப் பாள், அதை
நாடி யருகணைந்தால்—பல
ஞானங்கள் சொல்லி இனிமை செய்வாள், "இன்று
கூடிமகிழ்வ" மென்றால்—விழிக்
கோணத்தி லேநகை காட்டிச்செல் வாள், அம்மா! 2

ஆற்றங் கரைதனிலே—தனி
யானதோர் மண்டப மீதினிலே, தென்றற்
காற்றை நுகர்ந்திருந்தேன்—அங்கு
கன்னிக் கவிதை கொணர்ந்து தந்தாள், அதை
ஏற்று மனமகிழ்ந்தே—"அடி
என்னோ டிணங்கி மணம்புரி வாய்" என்று
போற்றிய போதினிலே—இளம்
புன்னகை பூத்து மறைந்துவிட்டாள். அம்மா! 3

சித்தந் தளர்ந்ததுண்டோ?— கலைத்
　　தேவியின் மீது விருப்பம் வளர்ந்தொரு
பித்துப் பிடித்தது போல்—பகற்
　　　　பேச்சும் இரவிற் கனவும் அவளிடை
வைத்த நினைவை யல்லால்—பிற
　　வாஞ்சை யுண்டோ?— வய தங்ஙன மேயிரு
பத்திரண் டாமளவும்—வெள்ளைப்
　　பண்மகள் காதலைப் பற்றிநின் றேன், அம்மா ! 4

இரண்டாவது—லக்ஷ்மி காதல்

இந்த நிலையினிலே— அங்கோர்
　　இன்பப் பொழிலி னிடையினில் வேறொரு
சுந்தரி வந்துநின்றாள்—அவள்
　　சோதி முகத்தின் அழகினைக் கண்டென்றன்
சிந்தை திறைகொடுத்தேன்—அவள்
　　செந்திரு வென்று பெயர்சொல்லி னாள், மற்றும்
அந்தந் தின முதலா—நெஞ்சம்
　　ஆரத் தழுவிட வேண்டுகின் றேன். அம்மா ! 5

புன்னகை செய்திடுவாள்—அற்றைப்
　　போது முழுதும் மகிழ்ந்திருப்பேன், சற்றென்
முன்னின்று பார்த்திடுவாள்—அந்த
　　மோகத்தி லேதலை சுற்றிடுங் காண், பின்னர்
என்ன பிழைகள் கண்டோ—அவள்
　　என்னைப் புறக்கணித் தேகிடுவாள், அங்கு
சின்னமும் பின்னமுமா—மனஞ்
　　சிந்தியுளமிக நொந்திடு வேன், அம்மா ! 6

காட்டு வழிகளிலே—மலைக்
　　காட்சியிலே புனல் வீழ்ச்சி யிலே, பல
நாட்டுப் புறங்களிலே நகர்
　　நண்ணு சிலசுடர் மாடத்தி லே, சில

வேட்டுவர் சார்பினிலே—சில
　　வீர ரிடத்திலும், வேந்த ரிடத்திலும்,
மீட்டு மவள் வருவாள்—கண்ட
　　விந்தை யிலேயின்ப மேற்கொண்டு போம், அம்மா! 7

மூன்றாவது—காளி காதல்

பின்னொர் இராவினிலே—கரும்
　　பெண்மையழகொன்று வந்தது கண்முன்பு,
கன்னி வடிவமென்றே—களி
　　கண்டு சற்றேயரு கிற்சென்று பார்க்கையில்
அன்னை வடிவமடா!— இவள்
　　ஆதி பராசக்தி தேவி யடா—இவள் 8

இன்னருள் வேண்டுமடா!—பின்னர்
　　யாவு முலகில் வசப்பட்டுப் போமடா!
செல்வங்கள் பொங்கிவரும்! —நல்ல
　　தெள்ளறி வெய்தி நலம்பல சார்ந்திடும்;
அல்லும் பகலுமிங்கே—இவை
　　அத்தனை கோடிப் பொருளினுள்ளே நின்று
வில்லை யசைப்பவளை—இந்த
　　வேலை யனைத்தையும் செய்யும் வினைச்சியைத்
தொல்லை தவிர்ப்பவளை—நித்தம்
　　தோத்திரம் பாடித் தொழுதிடு வோமடா

## 3. ஆறு துணை

ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்—பரா சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்.
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி—ஓம் சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்.

1. கணபதி ராயன்—அவனிரு
காலைப் பிடித் திடுவோம்;
குண முயர்ந்திடவே—விடுதலை
கூடி மகிழ்ந்திடவே. (ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்)

2. சொல்லுக் கடங்காவே—பரா சக்தி
சூரத் தனங்க ளெல்லாம்;
வல்லமை தந்திடுவாள்—பரா சக்தி
வாழி யென்றே துதிப்போம். (ஓம் சக்தி—)

3. வெற்றி வடிவேலன்—அவனுடை
வீரத்தினைப் புகழ்வோம்;
சுற்றி நில்லாதே போ!—பகையே
துள்ளி வருகுது வேல். (ஓம் சக்தி...)

4. தாமரைப் பூவினிலே—சுருதியைத்
தனியிருந் துரைப்பாள்
பூமணித் தாளினை யே—கண்ணி லொற்றிப்
புண்ணிய மெய்திடுவோம். (ஓம் சக்தி)

5. பாம்புத் தலைமேலே—நடஞ் செயும்
பாதத்தினைப் புகழ் வோம்;
மாம்பழ வாயினிலே குழலிசை
வண்மை புகழ்ந்திடு வோம்; (ஓம் சக்தி...)

6. செல்வத் திருமகளைத்—திடங்கொண்டு
சிந்தனை செய்திடுவோம்;
செல்வ மெல்லாந் தருவாள்—நம தொளி
திக்க னைத்தும் பரவும். (ஓம் சக்தி...)

## 4. நந்த லாலா

காக்கைச் சிறகினிலே நந்த லாலா!—நின்றன்
கரிய நிறந் தோன்றுதையே, நந்த லாலா! 1

பார்க்கும் மரங்க ளெல்லாம் நந்த லாலா! ...நின்றன்
பச்சை நிறந் தோன்றுதையே, நந்த லாலா, 2

கேட்கு மொலியி லெல்லாம் நந்த லாலா!—நின்றன்
கீத மிசைக்குதடா நந்த லாலா! 3

தீக்குள் விரலை வைத்தால் நந்த லாலா!—நின்னைத்
தீண்டு மின்பந் தோன்றுதடா, நந்த லாலா! 4

## 5. ஓம் சக்தி

நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர்மணிப் பூண்,
பஞ்சுக்கு நேர்பல துன்பங்களாம், இவள்
பார்வைக்கு நேர் பெருந்தீ.
வஞ்சனை யின்றிப் பகையின்றிச் சூதின்றி
வையக மாந்த ரெல்லாம்,
தஞ்சமென் றேயுரைப்பீர் அவள் பேர், சக்தி
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம்,

நல்லதுந் தீயதுஞ் செய்திடும் சக்தி
நலத்தை நமக்கிழைப் பாள்:
அல்லது நீங்கும்'' என்ற யுலகேளும்
அறைந்திடுவாய் முரசே!
சொல்லத் தகுந்த பொருளன்று காண்! இங்கு
சொல்லு மவர் தமையே,
அல்லல் கெடுத்தம ரர்க்கிணை யாக்கிடும்
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம்,

நம்புவ தேவழி யென்ற மறைதன்னை
நாமின்று நம்பி விட்டோம்
கும்பிட்டெந் நேரமும் "சக்தி" யென் றாலுனைக்
கும்பிடுவேன் மனமே!
அம்புக்கும் தீக்கும் விடத்துக்கும் நோவுக்கும்
அச்ச மில்லாத படி
உம்பரிக்கும் இம்பர்க்கும் வாழ்வு தரும்பதம்
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம்.

பொன்னைப் பொழிந்திடு, மின்னை வளர்த்திடு,
போற்றி உனக்கிசைத் தோம்;
அன்னை பரா சக்தி என்றுரைத்தோம்; தளை
அத்தனையுங் களைந்தோம்;
சொன்ன படிக்கு நடந்திடு வாய், மன
மே தொழில் வேறில்லை, காண்'
இன்னுமதே யுரைப்போம், சக்தி ஓம் சக்தி
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம்.

வெள்ளை மலர்மிசை வேதக் கருப்பொரு
ளாக விளங்கிடு வாய்!
தெள்ளு கலைத்தமிழ் வாணி! நினக்கொரு
விண்ணப்பஞ் செய்திடுவேன்;
எள்ளத் தனைப்பொழுதும் பயனின்றி
இரா தென்றன் நாவினிலே
வெள்ள மெனப்பொழி வாய்சக்தி வேல், சக்தி
வேல் சக்தி வேல், சக்தி வேல்!

---

சிறப்புறப் பாடியவர்: சங்கீத கலாநிதி திருமதி. எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள்.

## 6. இறைவா இறைவா!

பல்லவி

எத்தனை கோடி இன்பம் வைத்தாய்!—எங்கள்
இறைவா! இறைவா! இறைவா! (ஓ-எத்தனை)

சரணங்கள்

1. சித்தினை அசித்துடன் இணைத்தாய்—அங்கு
சேரும்ஐம் பூதத்து வியனுல கமைத்தாய்
அத்தனை யுலகமும் வர்ணக் களஞ்சிய
மாகப் பலபலநல் லழகுகள் சமைத்தாய். (ஓ—எத்தனை)

2. முக்தியென் றொருநிலை சமைத்தாய்—அங்கு
முழுதினையு முணரும் உணர் வமைத்தாய்
பக்தியென் றொருநிலை வகுத்தாய்—எங்கள்
பரமா! பரமா! பரமா! (ஓ-எத்தனை)

## 7. வெள்ளைத் தாமரை

1. வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்,
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்;
கொள்ளை யின்பம் குலவு கவிதை
கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்!
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
ஓதும் வேதத்தின் உள்நின் றொளிர்வாள்;
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொரு ளாவாள். (வெள்ளைத்)

2. மாதர் தீங்குரற் பாட்டில் இருப்பாள்,
மக்கள் பேசும் மழலையில் உள்ளாள்;
கீதம் பாடும் குயிலின் குரலைக்
கிளியின் நாவை இருப்பிடங் கொண்டாள்;
கோத கன்ற தொழிலுடைத் தாகிக்
குலவு சித்திரம் கோபுரம் கோயில்
ஈதனைத்தின் எழிலிடை யுற்றாள்
இன்ப மேவடி வாகிடப் பெற்றாள். (வெள்ளைத்)

3. வஞ்ச மற்ற தொழில்புரிந் துண்டு
வாழும் மாந்தர் குலதெய்வ மாவாள்;
வெஞ்ச மர்க்குயி ராகிய கொல்லர்
வித்தை யோர்ந்திடு சிற்பியர், தச்சர்,
மிஞ்ச நற்பொருள் வாணிகஞ் செய்வோர்,
வீரமன்னர்பின் வேதியர் யாரும்
தஞ்ச மென்று வணங்கிடுந் தெய்வம்
தரணி மீதறி வாகிய தெய்வம். (வெள்ளைத்)

4. தெய்வம் யாவும் உணர்ந்திடும் தெய்வம்,
தீமைகாட்டி விலக்கிடுந் தெய்வம்;
உய்வ மென்ற கருத்துடை யோர்கள்
உயிரி னுக்குயி ராகிய தெய்வம்;
செய்வ மென்றொரு செய்கை யெடுப்போர்
செம்மை நாடிப் பணிந்திடு தெய்வம்;
கைவ குந்தி உழைப்பவர் தெய்வம்
கவிஞர் தெய்வம், கடவுளர் தெய்வம். (வெள்ளைத்

---

சிறப்புறப் பாடியவர்: சங்கீத கலாநிதி மதுரை மணி
ஐய்யர் அவர்கள்.

## 8. நம்ம ஜாதிக் கடுக்குமோ....

(புதிய கட்சித் தலைவரை நோக்கி நிதானக் கட்சியார் சொல்லுதல்)

"ஓய் நந்தனாரே! நம்ம ஜாதிக் கடுக்குமோ? நியாயந் தானோ? நீர் சொல்லும்?" என்ற வர்ணமெட்டு

பல்லவி

ஓய் திலகரே! நம்ம ஜாதிக் கடுக்குமோ?
செய்வது சரியோ? சொல்லும்.

கண்ணிகள்

1. முன்னறி யாப் புது வழக்கம்—நீர்
   மூட்டிவிட்ட இந்தப் பழக்கம்—இப்போது
   எந்நகரிலு மிது முழக்கம்—மிக
   இடும்பை செய்யும் இந்த ஒழுக்கம் (ஓய் திலகரே)

2. சுதந்திரம் என்கிற பேச்சு—எங்கள்
   தொழும்புக ளெல்லாம் வீணாய்ப் போச்சு—இது
   மதம்பிடித் ததுபோலாச்சு—எங்கள்
   மனிதர்க் கெல்லாம்வந்த தேச்சு (ஓய் திலகரே)

3. வெள்ளை நிறத்தவர்க்கே ராஜ்யம்—அன்றி
   வேறெவர்க்குமது தியாஜ்யம்—சிறு
   பிள்ளைக ளுக்கே உபதேசம்—நீர்
   பேசிவைத்த தெல்லாம் மோசம். (ஓய் திலகரே)

## 9. மழை

திக்குகள் எட்டும் சிதறி—தக்கத்
    தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட—தீம்தரிகிட
பக்க மலைகள் உடைந்து—வெள்ளம்
    பாயுது பாயுது பாயுது—தாம்தரிகிட
தக்கத் ததிங்கிட தித்தோம்—அண்டம்
    சாயுது சாயுது சாயுது—பேய்கொண்டு
தக்கை யடிக்குது காற்று—தக்கத்
    தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட. 1

வெட்டி யடிக்குது மின்னல்,—கடல்
    வீரத் திரைகொண்டு விண்ணை யிடிக்குது;
கொட்டி யிடிக்குது மேகம்;—கூ
    கூவென்று விண்ணைக் குடையுது காற்று;
சட்டச்சட சட்டச்சட டட்டா—என்று
    தாளங்கள் கொட்டிக் கனைக்குது வானம்;
எட்டுத் திசையும் இடிய—மழை
    எங்ஙனம் வந்ததடா, தம்பி வீரா! 2

அண்டம் குலுங்குது, தம்பி!—தலை
    ஆயிரந் தூக்கியே சேடனும் பேய்போல்
மிண்டிக் குதித்திடு கின்றான்;—திசை
    வெற்புக் குதிக்குது; வானத்து தேவர்
செண்டு புடைத்திடு கின்றார்;—என்ன
    தெய்விகக் காட்சியைக் கண்முன்பு கண்டோம்!
கண்டோம் கண்டோம், கண்டோம்—இந்தக்
    காலத்தின் கூத்தினைக் கண்முன்பு கண்டோம்! 3

## 10. கண்ணன்—என் காதலன்

(பிரிவாற்றாமை)

ஆசை முகமறந்து போச்சே—இதை
ஆரிடம் சொல்வேனடி தோழி?
நேச மறக்கவில்லை நெஞ்சம்—எனில்
நினைவு முகமறக்க லாமோ? 1

கண்ணில் தெரியுதொரு தோற்றம்—அதில்
கண்ண னழகுமுழு தில்லை;
நண்ணு முகவடிவு காணில்—அந்த
நல்ல மலர்ச்சிரிப்பைக் காணோம். 2

ஓய்வு மொழிதலுமில் லாமல்—அவன்
உறவை நினைத்திருக்கும் உள்ளம்;
வாயு முரைப்பதுண்டு கண்டாய்—அந்த
மாயன் புகழினையெப் போதும். 3

கண்கள் புரிந்துவிட்ட பாவம்—உயிர்க்
கண்ண னுருமறக்க லாச்சு;
பெண்க ளிடத்திலிது போலே—ஒரு
பேதையை முன்புகண்ட துண்டோ? 4

தேனை மறந்திருக்கும் வண்டும்—ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும்—இந்த
வைய முழுதுமில்லை தோழி! 5

கண்ணன் முகமறந்து போனால்—இந்தக்
கண்க ளிருந்தும் பயனுண்டோ?
வண்ணப் படமுமில்லை கண்டாய்—இனி
வாழும் வழியென்னடி தோழி? 6

---

சிறப்புறப் பாடியவர்: சங்கீதகலாநிதி செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர் அவர்கள்.

## 11. கண்ணன்—என் காதலன்

*(காட்டிலே தேடுதல்)*

திக்குத் தெரியாத காட்டில்—உனைத்
தேடித் தேடிஇளைத்தேனே.

1. மிக்க நலமுடைய மரங்கள்,—பல
விந்தைச் சுவையுடைய கனிகள்,—எந்தப்
பக்கத்தையும் மறைக்கும் வரைகள்,—அங்கு
பாடி நகர்ந்து வரு நதிகள்,—ஒரு (திக்குத்)

2. நெஞ்சிற் கனல்மணக்கும் பூக்கள்,—எங்கும்
நீளக் கிடக்குமிலைக் கடல்கள்—மதி
வஞ்சித் திடுமகழிச் சுனைகள்,—முட்கள்
மண்டித் துயர்கொடுக்கும் புதர்கள்,—ஒரு (திக்குத்)

3. ஆசை பெறவிழிக்கும் மான்கள்,—உள்ளம்
அஞ்சக் குரல்பழகும் புலிகள்,—நல்ல
நேசக் கவிதைசொலும் பறவை,—அங்கு
நீண்டே படுத்திருக்கும் பாம்பு,—ஒரு (திக்குத்)

4. தன்னிச்சை கொண்டலையும் சிங்கம்—அதன்
சத்தத் தினிற்கலங்கும் யானை—அதன்
முன்னின் றோடுமிள மான்கள்—இவை
முட்டா தயல்பதுங்குந் தவளை—ஒரு (திக்குத்)

5. கால்கை சோர்ந்துவிழ லானேன்—இரு
கண்ணும் துயில்படர லானேன்—ஒரு
வேல்கைக் கொண்டுகொலை வேடன்—உள்ளம்
வெட்கம் கொண்டொழிய விழித்தான்—ஒரு (திக்குத்)

6. "பெண்ணே உனதழகைக் கண்டு—மனம்
பித்தங்கொள்ளு" தென்று நகைத்தான்—"அடி
கண்ணே, எனதிருகண் மணியே—உனைக்
கட்டித் தழுவமனம் கொண்டேன்.

7. சோர்ந்தே படுத்திருக்க லாமோ?—நல்ல
துண்டக் கறிசமைத்துத் தின்போம்—சுவை
தேர்ந்தே கனிகள் கொண்டு வருவேன்—நல்ல
தேங்கள் ளுண்டினிது களிப்போம்"

8. என்றே கொடியவிழி வேடன்—உயிர்
இற்றுப் போகவிழித் துரைத்தான்—தனி
நின்றே இருகரமுங் குவித்து—அந்த
நீசன் முன்னர் இவை சொல்வேன்:

9. "அண்ணா உனதடியில் வீழ்வேன்—எனை
அஞ்சக் கொடுமைசொல்ல வேண்டா—பிறன்
கண்ணாலஞ் செய்துவிட்ட பெண்ணை—உன்றன்
கண்ணாற் பார்த்திடவுந் தகுமோ?"

10. "ஏடி, சாத்திரங்கள் வேண்டேன்;—நின
தின்பம் வேண்டுமடி, கனியே,—நின்றன்
மோடி கிறுக்குதடி தலையை,—நல்ல
மொந்தைப் பழையகள்ளைப் போலே"

11. காதா லிந்தவுரை கேட்டேன்—"அட
கண்ணா" வென்றலறி வீழ்ந்தேன்—மிகப்
போதாக வில்லையிதற் குள்ளே—என்றன்
போதந் தெளியநினைக் கண்டேன்.

12. கண்ணா! வேடனெங்கு போனான்—உனைக்
கண்டே யலறிவிழுந் தானோ?—மணி
வண்ணா! எனதபயக் குரலில்—எனை
வாழ்விக்க வந்தஅருள் வாழி!

---

சிறப்புறப் பாடியவர்: சங்கீத கலாநிதி ஜீ. என். பால
சுப்ரமண்யம் அவர்கள்.

# 12. கண்ணன்—என் காதலன்

(பாங்கியைத் தூது விடுதல்)

*ரசங்கள்: சிருங்காரம், ரௌத்ரம்.*

*கண்ணன் மனநிலையைத் தங்கமே தங்கம்;*
*கண்டுவர வேணுமடி தங்கமே தங்கம்;*
*எண்ண முரைத்துவிடில் தங்கமே தங்கம்—பின்னர்*
*ஏதெனிலுஞ் செய்வமடி தங்கமே தங்கம்.* 1

*கன்னிகை யாயிருந்து தங்கமே தங்கம்—நாங்கள்*
*காலங் கழிப்பமடி தங்கமே தங்கம்;*
*அன்னிய மன்னர் மக்கள் பூமியிலுண்டாம்—என்னும்*
*அதனையுஞ் சொல்லிடடி தங்கமே தங்கம்.* 2

*சொன்ன மொழிதவறும் மன்னவனுக்கே—எங்கும்*
*தோழமை யில்லையடி தங்கமே தங்கம்;*
*என்ன பிழைகளிங்கு கண்டிருக்கிறான்?—அவை*
*யாவும் தெளிவுபெறக் கேட்டு விடடீ!* 3

*மையல் கொடுத்துவிட்டுத் தங்கமே தங்கம்—தலை*
*மறைந்து திரிபவர்க்கு மானமு முண்டோ?*
*பொய்யை யுருவமெனக் கொண்டவனென்றே—கிழப்*
*பொன்னி யுரைத்ததுண்டு தங்கமே தங்கம்.* 4

*ஆற்றங் கரையதனில் முன்னமொருநாள்—எனை*
*அழைத்துத் தனியிடத்தில் பேசிய தெல்லாம்*
*தூற்றி நகர்முரசு சாற்றுவனென்றே*
*சொல்லி வருவையடி தங்கமே தங்கம்.* 5

*சோர மிழைத்திடையர் பெண்களுடனே—அவன்*
*சூழ்ச்சித் திறமை பல காட்டுவ தெல்லாம்*
*வீர மறக்குலத்து மாதரிடத்தே*
*வேண்டிய தில்லையென்று சொல்லி விடடீ!* 6

பெண்ணென்று பூமிதனில் பிறந்துவிட்டால்—மிகப்
பீழை யிருக்குதடி தங்கமே தங்கம்;
பண்ணென்று வேய்ங்குழலில் ஊதி வந்திட்டான்—அதைப்
பற்றி மறக்கு தில்லை பஞ்சையுள்ளமே. 7

## 13. கண்ணம்மா — என் குழந்தை

சின்னஞ் சிறுகிளியே,—கண்ணம்மா
செல்வக் களஞ்சியமே!
என்னைக் கலி தீர்த்தே—உலகில்
ஏற்றம் புரிய வந்தாய்! 1

பிள்ளைக் கனியமுதே,—கண்ணம்மா
பேசும்பொற் சித்திரமே;
அள்ளி யணைத்திடவே—என் முன்னே
ஆடி வருந் தேனே! 2

ஓடி வருகையிலே—கண்ணம்மா!
உள்ளங் குளிரு தடீ!
ஆடித்திரிதல் கண்டால்—உன்னைப்போய்
ஆவி தழுவு தடீ! 3

உச்சி தனை முகந்தால்—கருவம்
ஓங்கி வளரு தடீ
மெச்சி யுனையூரார்—புகழ்ந்தால்
மேனி சிலிர்க்குதடி! 4

கன்னத்தில் முத்தமிட்டால்—உள்ளந்தான்
கள்வெறி கொள்ளு தடீ!
உன்னைத் தழுவிடிலோ—கண்ணம்மா
உன்மத்த மாகு தடீ 5

சற்றுன் முகஞ் சிவந்தால்—மனது
 சஞ்சல மாகு தடீ
நெற்றிச் சுருங்கக் கண்டால்—எனக்கு
 நெஞ்சம் பதைக்குதடீ! 6

உன்கண்ணில் நீர்வழிந்தால்—என்னெஞ்சில்
 உதிரங் கொட்டு தடீ!
என் கண்ணிற் பாவையன்றோ?—கண்ணம்மா!
 என்னுயிர் நின்ன தன்றோ? 7

சொல்லு மழலையிலே— கண்ணம்மா!
 துன்பங்கள் தீர்த்திடு வாய்.
முல்லைச் சிரிப்பாலே—எனது
 மூர்க்கந் தவிர்த்திடு வாய்; 8

இன்பக் கதைகளெல்லாம்— உன்னைப்போல்
 ஏடுகள் சொல்வ துண்டோ?
அன்பு தருவதிலே—உனைநேர்
 ஆகுமோர் தெய்வ முண்டோ? 9

மார்பில் அணிவதற்கே—உன்னைப்போல்
 வைர மணிக ளுண்டோ?
சீர்பெற்று வாழ்வதற்கே—உன்னைப்போல்
 செல்வம் பிறிது முண்டோ? 10

---

சிறப்புறப் பாடியவர். சங்கீதகலாநிதி ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரி அவர்கள்.

## 14. கண்ணன்—என் விளையாட்டுப் பிள்ளை

ரசங்கள் : அற்புதம், சிருங்காரம்

தீராத விளையாட்டுப் பிள்ளை—கண்ணன்
தெருவிலே பெண்களுக் கோயாத தொல்லை. (தீராத)

1. தின்னப் பழங்கொண்டு தருவான்;— பாதி
தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான்;
என்னப்பன் என்னையன் என்றால்—அதனை
எச்சிற் படுத்திக் கடித்துக் கொடுப்பான். (தீராத)

2. தேனொத்த பண்டங்கள் கொண்டு—என்ன
செய்தாலும் எட்டாத உயரத்தில் வைப்பான்;
மானொத்த பெண்ணடி என்பான்—சற்று
மனமகிழும் நேரத்தி லேகிள்ளி விடுவான்.(தீராத)

3. அழகுள்ள மலர்கொண்டு வந்தே—என்னை
அழ அழச் செய்துபின் "கண்ணை மூடிக்கொள்
குழலிலே சூட்டுவேன்"—என்பான்—என்னைக்
குருடாக்கி மலரினைத் தோழிக்கு வைப்பான்.
(தீராத)

4. பின்னலைப் பின்னின் றிழுப்பான்;—தலை
பின்னே திரும்புமுன் னேசென்று மறைவான்;
வன்னப் புதுச்சேலை தனிலே—புழுதி
வாரிச் சொறிந்தே வருத்திக் குலைப்பான். (தீராத)

5. புள்ளாங் குழல்கொண்டு வருவான்—அமுது
பொங்கித் ததும்புநற் கீதம் படிப்பான்;
கள்ளால் மயங்குவது போலே—அதைக்
கண்மூடி வாய்திறந் தேகேட் டிருப்போம்.(தீராத)

6. அங்காந் திருக்கும்வாய் தனிலே—கண்ணன்
 ஆறேழு கட்டெறும் பைப்போட்டு விடுவான்;
எங்காகிலும் பார்த்த துண்டோ?—கண்ணன்
 எங்களைச் செய்கின்ற வேடிக்கை யொன்றோ?
(தீராத)

7. விளையாட வாவென் றழைப்பான்;—வீட்டில்
 வேலையென் றாலதைக் கேளா திழுப்பான்;
இளையாரொ டாடிக் குதிப்பான்;— எம்மை
 இடையிற் பிரிந்துபோய்வீட்டிலேசொல்வான்;
(தீராத)

8. அம்மைக்கு நல்லவன் கண்டீர்!—மூளி
 அத்தைக்கு நல்லவன், தந்தைக்கு மஃதே,
எம்மைத் துயர்செய்யும் பெரியோர்—வீட்டில்
 யாவர்க்கும் நல்லவன் போலே நடப்பான்.
(தீராத)

9. கோளுக்கு மிகவும் சமர்த்தன்;—பொய்மைக்
 குத்திரம் பழிசொலக் கூசாச் சழக்கன்;
ஆளுக் கிசைந்தபடி பேசித்—தெருவில்
 அத்தனை பெண்களையும் ஆகா தடிப்பான்.
(தீராத)

---

சிறப்புறப் பாடியவர்: சங்கீத கலாநிதி திருமதி டி. கே. பட்டம்மாள் அவர்கள்.

## 15. ஜய பேரிகை

*ஜயபேரிகை கொட்டடா!—கொட்டடா*
*ஜய பேரிகை கொட்டடா!*

*சரணங்கள்*

1. பயமெனும் பேய்தனை யடித்தோம்—பொய்ம்மைப்
பாம்பைப் பிளந்துயிரைக் குடித்தோம்;
வியனுல கனைத்தையும் அமுதென நுகரும்
வேத வாழ்வினைக் கைப்பிடித்தோம்
(ஜய பேரிகை)

2. இரவியி னொளியிடைக் குளித்தோம்—ஒளி
இன்னமு தினைக்கண்டு களித்தோம்;
கரவினில் வந்துயிர்க் குலத்தினை யழிக்கும்;
காலன் நடுநடுங்க விழித்தோம். (ஜய பேரிகை)

3. காக்கை குருவி எங்கள் ஜாதி—நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்;
நோக்குந் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை;
நோக்க நோக்கக் களி யாட்டம். (ஜய பேரிகை)